# LORD BUDDHA

OR

## THE LIGHT OF THE UNIVERSE

IN TAMIL

BY

**Rao Bahadur P. SAMBANDAM,**
B.A., B.L.,

Author of:

The Two Sisters," "Galava." "Vikramorvasi" "Blind Ambition," "The Two Friends," "Fate and Love," "Sarangadhara," "Simhalanatha," "Pushpavalli," "Amaladitya," "Magapathi," "Farces," "Siruthondar," "The Golden Fetters," "True Love," "The Bandit Chief," "Markandeya," "The Fair Ghost," "The Merchant of Vanipura," "The Wedding of Valli," "The Eye of Love," "Vijayarangam," "As you like it," "Ratnavali," "Malävikagnimitram," "The Tragedy of Silence," "The Good Fairy," "Geetha Manjari," "Harischandra," "As We Sow-So We Reap," "The Curse of Oorvasi," "Chandrahari," "The Demon Land," "Sabapathy Part I," "The Pongal Feast" or "Sabapathy Part II," "A Rehearsal" or "Sabapathy" Part III, "Blessed-in a Wife," "The Dancing Girl" "Subbadra Arjuna" "Karna-The Giver" "Sahadeva's Stratagem" "Bricks Between & At Any Cost" "Surgeon General's prescription & Vichu's Wife" "Sakuntala" "The Point of View & The Two Selves" "Manohara" "The Tragic Denoument & The Sub Asst. Magistrate of Sultanpet" etc. in Tamil; and "Harischandra," and "Yayathi" in English.

***SECOND EDITION.***

Madras:
PRINTED BY DOWDEN AND CO., AT THE "PEERLESS PRESS,"
21, Sunkurama Chetty Street.

1930

*All Rights reserved.*] [Price per Copy Re. 3.00

உ

# புத்த அவதாரம்

இஃது

ராவ் பஹதூர்

## ப. சம்பந்த முதலியார், பி-ஏ., பி-எல்.,

அவர்களால் இயற்றப்பட்டது.

இந்த நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்ற நூல்கள் :—

“லீலாவதி-சுலோசனை” “கள்வர் தலைவன்,” “விக்கிரம ஊர்வசி” “இரண்டு நண்பர்கள்,” “சாரங்கதரன்,” “நற்குல தெய்வம்,” “சத்ருஜித்,” “யயாதி” ‘மார்க்கண்டேயர்,” “விஜயரங்கம்,” “காதலர் கண்கள்,” “பேயல்ல-பெண்மணியே.” “மகபதி,” “மெய்க்காதல்,” “பொன் விலங்குகள்,” “சிம்ஹளநாதன்,” “விரும்பிய விதமே,” “சிறுத்தொண்டர்,” “காலவரிஷி,” “வாணிபுர வணிகன்,” “ரஜபுத்ரவீரன்,” “ஹரிச்சந்திரன்,” “ரத்னாவளி,” “புஷ்பவல்லி,” “கீதமஞ்சரி,” “பிரஹசனங்கள்,” “ஊர்வசியின் சாபம்,” “அமலாதித்யன்” “சபாபதி-முதற் பாகம்,” “பொங்கல் பண்டிகை” அல்லது சபாபதி இரண்டாம் பாகம், “ஓர் ஒத்திகை” அல்லது சபாபதி மூன்றாம்பாகம், “வள்ளிமணம்” “முற்பகற்செய்யின் பிற்பகல் விளையும்,” “சகதேவன் சூழ்ச்சி” “வேதாள உலகம்,” “மனைவியால் மீண்டவன்,” “தாசிப்பெண்” “சுபத்திரார்ஜுனா” “கொடையாளி கர்ணன்” “சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து-விச்சுவின் மனைவி” “மாளவிகாக்னிமித்திரம்” “இடைச்சுவர் இருபுறமும் - என்ன நேர்ந்திடினும்” “சகுந்தலை” “நோக்கத்தின் குறிப்பு - இரண்டு ஆத்துமாக்கள்” “மனோஹரன்” “விபரீதமான முடிவு - சுல்தான்பேட்டை சப் அசிஸ்டெண்ட் மாஜிஸ்டிரேட்” முதலியன.

இரண்டாம் பதிப்பு

சென்னை :

டௌடன் கம்பெனியாரின்

பியர்லெஸ் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1930

காபி ரைட்]

[விலை ரூ 3.00

# PREFACE.

Ever since my first visit to Ceylon in 1908, the life of the Greatest Teacher of the world, Lord Buddha, had a special attraction for me. The idea of writing a drama on the subject was put into my head by some of my Colombo friends. Much has been written about the life of the Great One, and there has been so much of variation as to details according to different authors. The difficulty of my task was chiefly to choose, as to what I was to retain, for a five-act drama to be acted within the space of three hours. I know there are several incidents of Lord Budha's life which orthodox Budhists would blame me for having omitted; my answer to them is that what I have written is not a biography, but a drama.

I have to thank my Budhist friends for their kind suggestions in the course of my writing this work. I shall always feel thankful for any further suggestions or corrections, which I will attend to, in my next Edition of this book.

I have also to thank my friend Mr. A. Madhaviah for his having kindly permitted me to use two of his poetic translations of some of the lines of Edwin Arnold.

A mere study of the life of the Great Teacher has made me a different man. May this humble work induce some at least of my readers, to follow the great lessons taught by the Light of the Universe.

N. B.—Societies desirous of staging this or any other drama by me are informed that they have to pay a small Royalty for each performance and obtain my previous permission before doing so.

"PAMMAL LODGE"
G. T. MADRÁS.

The Author

INSCRIBED

TO

THE BELOVED MEMORY OF

**MY PARENTS**

P. VIJIARANGA MUDALIAR,

and

P. MANICKAVELU AMMAL,

and

**MY FRIEND**

C. RANGAVADIVELU

# நாடக பாத்திரங்கள்



| | | |
|---|---|---|
| சுத்தோதனன் | ... | ... உத்தரகோசலத்து அரசன் |
| சித்தார்த்தன் | ... | ... சுத்தோதனன் புதல்வன் |
| ராகுலன் | ... | ... சித்தார்த்தன் புதல்வன் |
| சுப்பிரபுத்தன் | ... | ... சுத்தோதனனுடைய மைத்துனன் |
| மித்திரர் | ... | ... சித்தார்த்தனுடைய ஆசாரியர் |
| பிம்பசாரன் | ... | ... ராஜக்கிரஹத்து அரசன் |
| தேவதத்தன் | ... | |
| நந்தன் | ... | .... ராஜகுமாரர்கள் |
| அர்ஜுனன் | ... | |
| உதாயி | .... | .... சித்தார்த்தன் பாங்கன் |
| சந்தகன் | ... | .... சித்தார்த்தனுடைய சூதன் |
| சதானந்தன் | ... | ... ஒரு நிமித்திகன் |
| அசிதர் | ... | ... ஒரு முனிவர் |
| கௌண்டின்யகுலபுத்ரர் | | |
| தசபலகாஸ்யபர் | .... | |
| பாஷ்பர் | ... | .... ஐந்து முனிவர்கள் |
| பத்திரர் | .... | |
| அஸ்வசித் | ... | |
| சாரீபுத்ரன் | ... | |
| மௌத்கல்யாயனன் | | |
| அக்னிகாஸ்யபர் | ... | |
| மஹாகாஸ்யபர் | .... | |
| ராதபாலன் | ... | |
| சுபூதி | .... | .... சித்தார்த்தருடைய சிஷ்யர்கள் |
| பூரணன் | ... | |
| காத்யாயனன் | ... | |
| ஆநந்தன் | ... | |
| அனுருத்தன் | .... | |

| | | |
|---|---|---|
| அநாதபரிபாலகன் | | |
| திரிபுஷன் ... | ... | வணிகர்கள் |
| பல்லுகன் .... | | |
| வத்சகோத்ரன் ... | ... | துறவிகள் |
| மாலங்கன் ... | | |
| சுபத்திரர் .... | .... | ஒரு பிராம்மண சன்யாசி |
| கௌதமி ... | .... | சித்தார்த்தன் மாற்றாந்தாய் |
| யசோதரை ... | .... | சித்தார்த்தன் மனைவி |
| ஆசை .... | | |
| வேகுளி .... | .... | மாரன் மங்கையர் |
| மாயை ... | | |
| கிருசாகௌதமி ... | .... | ஒரு மங்கை |
| சித்திரரேகை ... | | |
| சரவஸ்தி ... | | |
| பார்க்கவி ... | ... | ராஜகுமாரிகள் |
| சதுரிகை .... | | |
| சாம்பவி .... | | |
| சித்திரை ... | ... | யசோதரையின் தோழி |
| சுஜாதை ... | ... | பலன் எனும் இடையன் மகள் |
| ராதை ... | .... | சுஜாதையின் தோழி |

*அந்தணர், பிரஜைகள், மந்திரிகள், பிரதானிகள், வாயிலாள், சூதன், தாதிகள், அசிதர் மருகன், தூதர்கள், விதூஷகன், ஆட்கள், நாட்டியப் பெண்கள், பாடகர்கள், ஒரு வயோதிகன், ஒரு பிணியாளி, ஒரு பாடகன், ஒரு ஸ்ரமணன், ஒரு இடையன், சாரணர்கள், கணிகையர், காமன், பிட்சுக்கள் முதலியவர்.*

ஒரு தூதன் வெள்ளித்தட்டில் நவரத்னங்கள் முதலிய காணிக்கைகளுடன் வந்து அரசனை வணங்கி நிற்கிறான்.

தூ. ராஜாதி ராஜனே! தங்கள் மைத்துனராகிய சுப்பிர புத்தராஜன் தங்களுக்கு மகப்பேறுண்டானதைக் கேள்வியுற்றுத் தனக்குண்டான ஆநந்தத்தை தெரிவித்து, க்ஷேமம் விசாரித்து வரும்படி எனக்குக் கட்டளையிட்டார்; அன்றியும், அன்றைத்தினமே தனக்கோர் பெண் பிறந்ததையும் தெரிவிக்கும்படிச் சொன்னார்.

சு. மிகவும் சந்தோஷம், அதைக் கேள்வியுற்று நாமும் மிகவும் சந்தோஷப்பட்டோம் என்று உம்முடைய அரசனுக்குத் தெரிவியும். மந்திரி, இவரிடம் நமது மைத்துனருக்குத் தக்கபடி காணிக்கை முதலிய மரியாதையனுப்பும்.

ம. சித்தம் மஹாராஜா.

சூதன். மஹாராஜா, ஒரு விஞ்ஞாபனம், அன்றைத்தினமே நமது பட்டத்துப் பெட்டைக்குதிரை ஒரு குட்டியை ஈன்றது, அதை முன்பே கூறாத குறையை க்ஷமித்தருள வேண்டும்.

சு. என்ன ஆச்சர்யம்! ஒன்றின்மேலொன்றாய்ச் சுப சமாசாரங்களையே கேள்விப் படுகிறேன். இவைகளெல்லாம் எதைக்குறிக்கின்றனவோ ?

சதா. [அரசனெதிர் வந்து] ராஜன்! தமக்குக் கொஞ்சமேனும் சந்தேகம் வேண்டாம். இவைகள் உலகங்களுக்கெல்லாம் நேரிடப்போகிற ஓர் பெரும் நன்மையைக் குறிக்கின்கிறன என்று உறுதியாய் நம்பும்.

சு. ஆர்யரே, ஜாதகம் முற்றிலும் கணித்தாய் விட்டதா? எப்படி இருக்கிறது?

சதா. ராஜன், இப்படிப்பட்ட திவ்யமான ஜாதகத்தை இதுவரையில் நான் கண்டதுமில்லை, இனி காணவும் போகிற

தில்லை யென்றே உறுதியாய் நம்புகிறேன். இப்படிப் பட்ட ஜாதகன் ஒரு கல்பத்துக்கொருதரமே உதிப்பவனுவான். இவனுல் இவ் வீரேழ் புவனங்களிலு முள்ள எண்ணிறந்த ஜீவகோடிகளுக்கும், இதுவரையிலும் அவர்களுக்குக் கிட்டாத ஒரு பெரும் சுகிர்த முண்டாகப் போகிறது

சு மிகவும் சந்தோஷம் அது எப்படி உண்டாகும்? அதை அறிய விரும்புகிறேன்.

சதா. அது என்றைற் கூறமுடியாது. ஆயினும் நிமித்தங்களைக் கொண்டு இதைக்கூறக்கூடும் நான். இந்த ஜாதகனுடைய இருபத்தொன்பதாம் ஆண்டில் பெரியதோர் விசேஷம் நடக்கும். அதன் பிறகு இல்லறத்தில் இருப்பானுயின் உலகனைத்தும் ஒரு தனிக் குடைக்கீழ் ஆளும் சார்வபௌம சக்ரவர்த்தியாவான்; ஒரு கால் துறவறம் பூண்பானுயின், துறவிகளுக்கெல்லாம் ஒப்புயர்வற்றவனுகி உலகத்திலுள்ள இருளைப் போக்கும் ஒண்சுடர் விளக்காம் உத்தமனுவான்.

சு. அந்தோ! ஆர்யரே, தாம் கடைசியிற் கூறிய வார்த்தைகள் எனது மனதில் பெருங் கிலேசத்தை யுண்டுபண்ணுகின்றனவே. என் மைந்தன் துறவு பூண்பானுயின் தொன்மையான இந்த இக்ஷ்வாகு வம்சம் எப்படிப் போவது? இவனுக்கு விவாகமாகி புத்திர சந்தானமுண்டாகுமா என்று பார்த்துச் சொல்லும்.

சதா. ராஜன், இந்த ஜாதகனுக்கு விவாகமுமாகும், புத்திர சந்தானமு முண்டாகும். அன்றியும் உம்முடைய புத்திரனுக்கு சர்வார்த்தி சித்தி அல்லது சித்தார்த்தன் என்கிற நாமதேய மிடும், உமது குமாரன் எல்லா அர்த்தங்களிலும் சித்தி பெற்றவனுவான்.

சு. அங்ஙனமே செய்கிறேன். என் மனதிலிருந்து பெருங் கவலையை மாற்றினீர்.—மந்திரி, இவருக்குத் தக்கபடி பஹுமானம் செய்யும்.

ம. உத்தரவுபடி—சூதா, இவரை அழைத்துக்கொண்டு போய் இவரது விடுதியில் விட்டுவா. பிறகு இவருக்குத் தக்கபடி மரியாதை செய்வோம்.

சதா. [அரசனை நோக்கி] தீர்க்காயுஷ்மான்பவ! சகல மங்களப் பிராப்தி ரஸ்து! [போகும்பொழுது]
மந்திரி, இந்த ஜாதகத்தை இன்னும் எட்டு தினங்கள் பொறுத்துப் படித்துப் பாரும். [சூதனுடன் போகிறார்.]

சு. பிரதான், மற்றுமுள்ள அந்தணர் முதலியோர்களை யெல்லாம் அவரவர்கள் விடுதிகட்கு அழைத்துச் சென்று உணவளித்துத் தக்கபடி மரியாதை செய்யும்.

பி. சித்தம் மஹாராஜா.

அந்தணர். தீர்க்காயுஷ்மான்பவ சகல மங்களப் பிராப்திரஸ்து! [ஆசீர்வதிக்கின்றனர்.]

மற்றவர். ஜெயவிஜயீபவ!

[மற்றவர்கள் அரசனை வணங்குகின்றனர்; பிரதானி இவர்களையெல்லாம் அழைத்துச் செல்கிறார்.]

சூதன் மறுபடி வருகிறான்.

சூ. ராஜாதி ராஜனே! நம்முடைய கடைவாயிலில் தம்மைக் காண்பதற்காக மிகவும் வயோதிகரான மஹரிஷி ஒருவர் வந்திருக்கிறார். தன்னுடைய நாமதேயம் அசிதர் என்று தெரிவிக்கச் சொன்னார்—உள்ளே அழைத்து வரவா?

சு. அப்படியா? உடனே அழைத்துவா அவரை மரியாதையுடன். [சூதன் போகிறான்.]

சூதன், அசிதர், அவரது மருகன் மூவரும் வருகிறார்கள்.

சு. மஹரிஷி! வரவேண்டும்! வரவேண்டும்! [நமஸ்கரிக்கிறார்.]

அ. ராஜன்! ஜெயவிஜயீபவ! தீர்க்காயுஷ்மான்பவ! [ஆசீர்வதிக்கிறார்.]

சு. மஹரிஷி, இன்று சுதினம்! உமது பாதங்களைத் தர்சித்து இன்று கிரதார்த்தனானேன். இன்று தமது வரவால்

அ. ஹே! ராஜன்! கேவலம் குழந்தை யென்று அவ்வளவு எளிதிற் கூறிவிடாதே; அதன் மஹிமையை நீ அறியாய். இக்குழந்தை பிறந்தபோது யான் இமயமலைச் சாரலில் இருந்தேன்; திடீரென்று என்றும் காணா நன்னிமித்தங்களெல்லாம் தோன்றின; தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தனர், தேவதுந்துபி முழங்கிற்று, என் மனத்தில் கிடைத்தற்கரிய ஆனந்தமும் சாந்தியும் உண்டாயிற்று; உடனே இதற்குக்காரண மென்னவென்று, என் ஞான திருஷ்டியால் நோக்க, அகில புவனங்களிலுமுள்ள அஞ்ஞான இருளைப்போக்கும்படியான ஜோதிமணி, ஜம்பூத் வீபத்தில் கபிலவாஸ்துவில் உற்பவித்திருப்பதை உள்ளத்திலறிந்தேன்; உடனே கர்மேந்திரியங்களினால் கண்டு களிக்கவேண்டுமென்று இவ்விடம் வந்தேன்.

ஓர் தாதி குழவியாகிய சித்தார்த்தரைக் கையிலேந்தி வருகிறாள்.

மற்ற தாதியர் புடைசூழ்ந்து வருகின்றனர்.

அரசன் குழந்தையைக் கையில் வாங்கி அஸிதர் பாதத்தருகில் வைக்க முயல்கிறான்.

அ. [அதை தடுத்து] ஹே! ராஜன்! அங்ஙனம் செய்யாதீர் பொறும்!

[வணங்கிய ஹஸ்தத்துடன் குழந்தையைச் சற்று உற்று பார்க்கிறார்.]

உலகத்தில் அஞ்ஞான இருளைப் போக்க உவந் தவதரித்த குழவியே, உனக்கு நான் நமஸ்காரம் செய்கிறேன்!

[நமஸ்கரிக்கிறார்.]

சு. முனிசிரேஷ்டரே! இதென்ன தாங்கள்—

அ. ராஜன்! நான் சொல்வதைச் கவனமாய்க் கேள். இக்குழவியைக் கேவலமாக நினையாதே—தேக முழுவதும் தெய்வீகமான தேஜஸைக் காண்கிறேன்; இரு பாதங்

களிலும் ஸஹஸ்ரார சக்கர ரேகைகளிருக்கின்றன, சுவஸ்திரேகை முதலிய முப்பத்திரண்டு நற்குறிகள் முழுவதும் அமைந்திருக்கின்றன; மானிடராகிய மரத்தில் பல நூற்றுண்டுகளுக்கு ஒரு முறையே மலரும் மலர் இக்குழந்தை; ஆகவே இக்குழந்தை இவ்வீரேழ்புவனங்களிலுமுள்ள எண்ணிறந்த ஜீவராசிகட்கும் ஹிதோபதேசம் செய்து, தர்ம சக்கரத்தை நிலை நிறுத்தப் போகிறது. ஆயினும்—ஆயினும்— [கண்ணீர் விடுகிறார்.]

சு. முனிசிரேஷ்டரே! தாங்கள் துயருறுவதற்குக் காரணம் என்னோ? என் குழந்தைக்கு ஏதாவது இனி நேரிடப் போகிற கெடுதியைக் குறித்து இவ்வாறு கலங்குகிறீரா என்ன? உண்மையை உரைத்திடும்படி வேண்டுகிறேன், தாங்கள் கண்ணீர் சொரிவானேன்? காரணம் யாதோ?

அ. ஹே! ராஜன்! உனது குழந்தைக்கு ஒரு தெளர்ப்பாக்கியமும் கிடையாது, நான் வருந்துவது என் தெளர்ப்பாக்கியத்தைக் குறித்தே, உன் குழந்தை உலகனைத்தும் புகழ்ந்து போற்றும் ஒரு தணிப்புத்தனாய் ஹிதோபதேசம் செய்து, தர்ம சக்கரத்தை நடத்துங்கால், நான் கண்ணாரக்கண்டு, காதாரக்கேட்டுக்களிப்புறக் கொடுத்து வைக்காத தெளர்ப்பாக்கியன். தேகம் தளர்ந்து எனக்கு மூப்புமேலிட்டிருக்கிறபடியால், அச்சமயம் நான் இவ்வுலகத்தில் இரேன். அதற்காக நான் துயரப்பட்டேனே யொழிய வேறில்லை, இக்குழந்தைக்கு ஒரு கெடுதியும் நேரிடாது. இக்குழந்தை, மனிதர்களும் தேவர்களும் மற்றுமுள்ளப் பிராணிகளும் புகழ்ந்து போற்றும், அகில புவனங்களிலும் அறியாமையெனும் இருளை அகற்றி ஆநந்தத்தை அளிக்கவந்த, அழியாச் சுடரான பௌத்தன் என் அறிவாய்.

சு. ஸ்வாமின், எனது பாக்கியமே பாக்கியம்!

அ. [சிஷ்யனைப் பார்த்து] மருகா, நான் சொல்வதை கவனமாய்க்கேள் எனக்குப் பிற்காலம் ஒரு சமயம் வரும்.

அச்சமயம் இக்குழவி உலகத்தில் தர்ம சக்கரத்தை நடத்தவல்ல அறிவுடை பௌத்தனுயானுன் எனக் கேள்விப்படுவாய்; அதைக் கேட்டவுடன் இவன்பாற் சென்று சரணடைந்து, இவனது தர்மத்தைக் கேட்டு பிட்சுவாகி, விதேஹன் முக்தனுவாய்.

சி. தங்கள் சித்தப்படியே செய்கிறேன்.

சு. ஸ்வாமின், இவ்வாறு நடப்பதுஎப்பொழுதோ ?

அ. அஃது இப்பொழுது அறிவிக்கற் பாலதன்று—ராஜன் ! நான் வந்த காரியம் முடிந்தது. நான் விடை பெற்றுக் கொள்ளுகிறேன்.

[குழந்தையின் இரு பாதங்களிலும் பணிந்து, மும்முறை பிரதட்சிணம் செய்கிருர்.]

ஹே ! ராஜன் ! இனி நான உனக்குக் கோரவேண்டிய பாக்கியம் ஒன்றமில்லை. இக் குழவியைப் பெற்றதனுல் எல்லாப் பேறுகளேயும் பெற்றவனுனுய் ! இக்குழவியை ஈன்ற தந்தை யென்று உன் பெயர் உலகுள்ளளவும் நிலைபெற்றிருச்கும் மண்மீது. மகத்தான சக்ரவர்த்திகளின் ஆளுகை, அவர்களது ஆயுள்பர்யந்தம் தான் நிலைத்திருக்கும், இக் குழந்தையின் ஆளுகையோ காலாந்தரத்திற்கும் கடைப்பட்டு நிற்கும்!—ஓம் ! மணி பத்மே!

[நமஸ்கரித்து விட்டு, சிஷ்யனுடன் போகிருர்.]

காட்சி முடிகிறது.



# இரண்டாம் அங்கம்



## முதற் காட்சி.

இடம்:—சுத்தோதனன் அரண்மனையிலோர் முற்றம்.

மித்திரர் ஓர் ஆசனத்தின்மீது வீற்றிருக்க

அருகில் அஞ்சலிஹஸ்தனாய் சித்தார்த்தர் நிற்கிறார்.

மி. அப்பா, சித்தார்த்தா, ஸ்நானமெல்லாம் முடிந்து சுத்தனாயிருக்கிறாயா?

சி. ஆசார்யரே, தங்கள் ஆக்கினைப்படியே இருக்கிறேன்.

மி. ஆனால் உனது பலகையை எடுத்துக்கொள்

சி. சித்தம்.

மி. உனக்கு இன்றைத்தினம் காயத்ரி என்னும் சிறந்த ரஹஸ்யமான வேத மந்திரத்தை உபதேசிக்கப் போகிறேன். திரிகரண சுத்தியாய் மிகுந்த கவனத்துடன் கேட்டு, அதை உனது பலகையில் எழுதிக்கொண்டு மனனம் செய்.

சி. அப்படியே.

மி. ஓம்!—

சி. ஓம்!— [என்று சொல்லிவிட்டு எழுதுகிறார்.]

மி. [ஒருபுறமாக] என்ன இது? நான் சொல்வதன்முன் என்னவோ எழுதுகிறான்!—குழந்தாய், என்ன எழுதுகிறாய்?

சி. காயத்ரி மந்திரம்.

மி. எதோ காட்டு!

[பலகையில் எழுதியிருப்பதைப் பார்த்து.]

என்ன ஆச்சர்யம்! அப்பா, நான் சொல்வதன்முன்

உனக்கெப்படி தெரிந்தது? வேறு யாராவது உனக்குக் கற்பித்தார்களா என்ன?

சி. இல்லை ஸ்வாமின்—தாங்கள் தான்—முன்பு எப்பொழுதோ,—ஒரு காலத்தில்—கூறியதுபோல் தோற்றுகிறது.

மி. இந்த ஜன்மத்தில் இல்லை—எப்பொழுது என்று உன்னாற் கூற முடியுமா?

சி. ஆசார்யரே—ஏதோ என் மனத்தில் மறைவா யிருக்கிறது; தெளிவாக விளங்கவில்லை எனக்கு.

மி. அப்பா, உனது அபாரமான அறிவின் சக்தியை நான் என்னென்று புகழ்வேன்! நான் கற்பிக்காமலே சகல சாஸ்திரங்களையும் வித்தைகளையும், மந்திரங்களையும், கற்றவனாகிருய்; நீ என்னிடம் மாணவனா யிருப்பது ஓர் வியாஜம் போலும்.

சி. ஆசார்யரே, இந்த மந்திரத்தினுல் உண்டாகும் பலன் என்னவோ, அதைத் தாங்கள் திருவாய் மலர்ந்தருள வேண்டும்.

மி. அப்பா, இந்த மந்திரத்தினுல் சகல பாபங்களினுலும் உண்டாகும் துக்கங்கள் நிவாரணமாகுமென்று பெரியோர்கள் சொல்லியிருக்கிருர்கள்.

சி. பாபம் என்ருல் என்னவோ அதை அறிய விரும்புகிறேன்.

மி. பாபம் என்ருல்,—ஸ்ருதி ஸ்மிருதிகளாலும் பெரியோர்களாலும் தீயவை என்று விலக்கப்பட்டவைகளைச் செய்தலே பாபமாகும்.

சி. அப்படிப்பட்ட காரியங்களைச் செய்தால் துக்கமுண்டாவதாலுல், மனிதர்கள் அப்படிப்பட்ட காரியங்களைச் செய்வானேன்?

மி. அது அவர்களுடைய பூர்வ கர்ம வசம் என்று சொல்ல வேண்டும்.

சி. ஸ்வாமின், அதுதான் விளங்கவில்லை, அந்த பூர்வ கர்மா முதல் முதல் நேர்ந்ததற்கு ஒரு காரணம் வேண்டுமே?

மி. அப்பா, பரமேஸ்வரன் நம்மைப் பிறப்பிக்கும் பொழுது இந்த இயற்கையுடன் பிறப்பித்திருக்கிறுர் என்றே கூற வேண்டும்.

சி. ஸ்வாமின், அங்ஙனமாயின்—அவர் சர்வஞரென்றும், சர்வலோக தயாபரர் என்றும் கூறி யிருக்கிறீர்களே—அவருக்கு இது தெரியாமலா போச்சுது? அல்லது தெரிந்தும் இங்ஙனம் செய்தாரென்ருல், அவருக்குக் கருணையில்லையென்று கூறியபடி யாகுமே?

மி. குழந்தாய், நீ கேட்கும்படியான கேள்விக்குப் பதில் என்னுல் உரைத்திட முடியாது. அது அந்த சர்வேஸ்வரன் ஒருவருக்குத்தான் தெரியும். வேறு ஏதாவது கேட்கவேண்டியிருந்தால் கேள்.

சி. சித்தம்—தாங்கள் இது ரஹஸ்யமான மந்திரம் என்று கூறினீரே அது என்ன? இதை நான் ஒருவருக்கும் சொல்லக்கூடாதா என்ன?

மி. அப்படியல்ல த்விஜாதியராகிய, பிராம்மண க்ஷத்ரிய வைசியர்களுக்கு மாத்திரம் இம் மந்திரத்தை உபதேசிக்கலாமே யொழிய, சூத்திரர்களுக்கும் மற்றவர்களுக்கும் சொல்லக்கூடாது; அன்றியும் ஸ்திரீகளுக்கும் உபதேசிக்கக்கூடாது.

சி. அது ஏன்? சூத்திரர்களும், ஏனையோரும், ஸ்திரீகளும் நம்மைவிட நற்குணமுடையவர்களோ? அவர்கள் பாப கர்மங்களைச் செய்யமாட்டார்களோ?

மி. அன்று! அன்று! அவர்கள் நம்மைப்போல் அத்தனை அறிவுடையவர்கள் அன்று; அவர்கள் பாப கர்மாக்களை அதிகமாகச் செய்தே அந்த ஜன்மம் எடுக்கிறுர்கள்.

சி. ஆயின் அவர்களுக் கல்லவோ, இம் மந்திரம் அதிகமாக உபயோகப்படும், அப் பாபங்களினின்றும் நிவாரண மாகும்பொருட்டு ?

மி. அப்பா, அவர்களுக்கெல்லாம் இம் மந்திரோபதேசம் செய்யக்கூடாதென்பது தொன்று தொட்டு வழங்கும் வழக்கம்; அன்றியும் நமது பெரியோர்களுடைய கட்டளையு மப்படியே.

சி. ஆசார்யரே, அவர்களுக்குத் தெரிவித்தால், அதனால் நமக்காவது அல்லது அவர்களுக்காவது நேரும் கெடுதி என்னவோ ?

மி. கேட்பவர்களுக்கு ஒரு கெடுதியும் இல்லை, இதைக் கொண்டு அவர்கள் கடைத்தேறுவார்கள், சொல்பவனுக்கு ரௌரவாதி நரகம் வாய்க்குமென்று சொல்லியிருக்கிறது

சி. ஸ்வாமின் ! அவ்வளவுதானே ? ஆனால் அவர்களுக்கெல்லாம் இம் மந்திரத்தை உபதேசிக்கும்படி எனக்கு அனுமதி கொடுங்கள். அத்தனை கோடி பிராணிகளும் நற்கதி யடையட்டும்; நான் ஒருவன்தானே நரகத்திற்குப் போகப் போகிறேன்.

மி. ஆஹா ! [மூக்கின்மேல் விரலை வைத்து.]
இந்த ஞானம் இதுவரையில் எனக்கில்லாமற் போச்சுதே ! அப்பா, சித்தார்த்தா, இனி நான் உனக்கு குருவல்ல, நீ எனக்கு சிஷ்யன் அல்ல ! நீ எனக்குக் குரு, நான் உனக்கு சிஷ்யன் ! [கைகூப்பிப் பணிகிறார்.]

சி. ஆசார்யரே ! [அதைத் தடுத்து.]
தாங்கள் அவ்வாறு அறைந்திட லாகாது. அடியேன் அறிந்ததெல்லாம் அவ்விடத்திய அருளாகும். ஆகவே—

[ஆகாயத்தினின்றும் ஒரு அன்னப் பறவை, அம்பினால் எய்யப்பட்டு சித்தார்த்தர்மீது ஆர்த்தஸ்வரத்துடன் விழுகிறது.]

அந்தோ ! அந்தோ ! [அதைப் பரிவுடன் எடுக்கிறார்.]
ஸ்வாமின் ! இதோ பாருங்கள் அம்பொன்று இறக்கையில் தைத்திருக்கிறது !

[அதை மெல்ல எடுத்துவிட்டு அதற்குச் சிகிச்சை செய்கிறார்.

ஒரு தூதன் விரைந்து வருகிறான்.

தூ. ராஜகுமாரா, அந்த அன்னப் பறவையை இப்படி கொடும். அது எனது எஜமானனாகிய தேவதத்தரால் எய்யப்பட்டது.

சி. இது என்னிடம் வந்தடைந்ததே, இதை ஏன் உன் எஜமானனுக்கு நான் கொடுக்கவேண்டும் ?

தூ. ராஜகுமாரா, நீர் அறியாத நியாயமல்லவே. க்ஷத்திரிய தர்மப்படி, எவனது அம்பு முதலில் தைக்கிறதோ அவனுடையதே யாகும், எய்யப்பட்ட பறவையோ விலங்கோ.

சி. ஆம், இது மடிந்திருந்தால் இதனை வீழ்த்திய என் தாயாதியாகிய தேவதத்தனுடையதாகும் இது ; இது காயப்பட்டதே யொழிய கொல்லப்படவில்லை. அன்றியும் இது என்னிடம் சரணாகதி யடைந்ததுபோல் வந்து சேர்ந்தது; ஆகவே இதனுயிரை நான் காப்பாற்றுவேன். இதைக் கொடேன் என்று சொல் போ.

தூ. இதென்ன சங்கடமாய் நேர்ந்தது ! எனது எஜமானன் இதை எப்படியாவது வாங்கி வரும்படி கட்டளையிட்டிருக்கிறாரே ! ஸ்வாமி ஆசார்யரே, தாங்களாவது சொல்லி இதைக் கொடுக்கச் சொல்லுங்கள்.

சி. சரி, அவரே நியாயம் சொல்லட்டும்.—ஆசார்யரே, இந்த அன்னப் பறவை இதைக் கொல்ல முயன்ற என் தாயாதி தேவதத்தனுக் குரிய பொருளோ, அல்லது இதனைக் காப்பாற்றப் பார்க்கும் எனக் குரித்தான பொருளோ ? தாமே கூறும்.

மி. அப்பா, இவ்வுலகில் எப்பொருளும் அதனை அழிக்கப் பார்க்கின்றவனுக் குரித்தாகாது, அதைக் காத்திடப் பார்ப்பவனுக்கே உரியதாகும்.

தூ. சரி! உங்களிஷ்டம். இதை அவரிடம் போய்த் தெரிவித்தால், இதற்காக உம்முடன் சண்டைக்கு வருவார்.

சி. வரட்டும் சந்தோஷமாய்! யுத்தப் பயிற்சி நானும் உடையவனு யிருக்கிறேன் என்பதை 'தேவதத்தன் அறியச் செய்கிறேன் இதனுயிரைக் காத்திட என்னுயிரையும் கொடுக்கச் சித்தமா யிருக்கிறேன் என்று சொல் போ.

[தூதன் போகிறுன்.]

ஸ்வாமின், க்ஷணநேரம் மன்னிக்கவேண்டும். இப்பட்சியைத் தக்கதோர் இடத்தில் வைத்துவிட்டு வருகிறேன்.

[ஒருபுறம் போகிறுர்.]

மி. மஹாரிஷியாகிய அசிதர் வாய்மொழி பொய்த்திடாது! சித்தார்த்தனுக்கு ஞானம் மேலிட்டு விட்டது. இக் குறிப்பை அரசனுக்கு அறிவிக்க வேண்டியது நம்முடைய கடமையாகும். [மற்றொருபுறம் போகிறுர்.]

சித்தார்த்தர் மறுபடி வருகிறுர்.

சி. எங்கே ஆசார்யர்? ஏதோ அவசரமாய்ப் போயிருக்க வேண்டும்; அவர் வந்து விடை கொடுக்குமளவும் நான் இவ்விடமே இருத்தல் வேண்டும்.—ஆ!—இதோ அப் பட்சியைக் காயப்படுத்திய அம்பு. [அதைக் கையில் எடுத்து] என்ன ஆர்த்த ஸ்வரத்துடன் அது என்னிடம் வந்து விழுந்தது! இந்த சிறு அம்பு அதற்கு அவ்வளவு கஷ்டம் கொடுக்குமா?

[தன் கையில் அதனுல் மெல்லக் குத்திப் பார்த்து]

அப்பா! [கீழே போட்டுவிட்டு]

அந்தோ! கொஞ்சம் இதனுல் நமது உடலில் கீறிப் பார்க்கும்பொழுதே நமக்கு இவ்வளவு நோயுண்டாகிறதே,

அதன் இறகில் அது ஊடுருவிச் சென்றபொழுது அப்பட்சிக்கு என்ன வருத்த முண்டாயிருக்கும்? ஐயோ! பட்சிகளையும் மிருகங்களையும் ஏன் வேட்டையாடி அம்புகளினால் அவைகளுக்குக் கஷ்ட முண்டாக்கி அவைகளுயிரை நாம் போக்கவேண்டும்? நிராயுதபாணியா யிருக்கும்பொழுது நம்மை யொருவன் வில்லம்பு கொண்டு வேட்டையாடுவானாயின் நமக்கெப்படி யிருக்கும்?—

மித்திரர் மறுபடி வருகிறார்.

மி. அப்பா, சித்தார்த்தா, என்ன ஒருவாறு யிருக்கிறாய்?

சி. ஆசார்யரே, தாங்கள் வந்ததைப்பார்க்கவில்லை, [வணங்கி] மன்னிக்கவேண்டும்.

மி. என்ன யோசித்துக்கொண் டிருக்கிறாய்?

சி. ஸ்வாமின், இவ்வுலகில் துக்கம் என்பது இப்படிப்பட்டதென்பதை இப்பொழுதுதான் அறிகிறேன். இவ்வுலகில் இத் துக்க மென்பதே இல்லாம லிருக்கும்படிச் செய்ய மார்க்கமொன்று மில்லையா என யோசிக்கிறேன்.

மி. அப்பா, அது தேவர்களாலும் முடியாத காரியம்; அசாத்தியமான விஷயத்தைக் கருதி அல்லற் படாதே.

சி. ஸ்வாமின், முன்பே தங்களைக் கேட்கவேண்டுமென்றிருந்தேன் ஒரு விஷயம், இன்று காலை நான் துயில் நீத்து எழுந்திருக்கும் தருவாயில், ஒரு கனவு கண்டது போ லிருந்தது—கனவென்றே சொல்லவேண்டுமென்று நினைக்கிறேன்—யாரோ ஒரு பெரியவர் என்னிடம் வந்து —"அப்பா, இன்னும் என்ன அந்தகாரத்திலிருக்கிறாய்? —நீ பிறந்த வேலையை யோசித்துப் பார்—கண்விழி!" என்று என்னைத் தட்டி எழுப்பியது போலிருந்தது. கண் விழிக்க, ஒருவரையும் காணாது கலங்கினேன். ஸ்வாமி,

நான் எதற்காக இப் புவியி லுதித்தேன் ?—

[இக் கடைசி வார்த்தைகளைப் பேசும் பொழுது சுத்தோதனன் பின்புறமாக வந்து நின்று உற்றுக் கேட்கிறார்.]

மி. அப்பா, அதை இப்பொழுது கூற நான் அசக்தனாயிருக்கிறேன். யுக்த காலம் வரும்பொழுது அதனை நீயே அறிவாய்—அதோ உன் தந்தை வந்திருக்கிறார் பார்.

சி. [திரும்பிப் பார்த்து] அப்பா! நான் பார்க்கவில்லை; மன்னிக்கவேண்டும். [பாதத்தில் பணிகிறார்.]

சு. [வாரி எடுத்து மார்போ டணைத்து] கண்ணே, சித்தார்த்தா, உனது உபாத்யாயர் உனக்கு சகல கலைகளும் சம்பூர்ணமாய் வந்து விட்டதாகச் சொல்லுகிறார், இனி தான் விடை பெற்றுச் செல்லவேண்டுமென்று கேட்கிறார்.

சி. ஸ்வாமின், ஆசார்யரே, தாங்கள் எப்பொழுதும் இவ்வரண்மனையிலேயே இருக்கலாகாதோ? ஆயினும் தங்கள் சித்தத்திற்குக் குறுக்குச் சொல்லலாகாது நான்.

சு. ஆகவே, அவருக்கு நீ குருதட்சிணை செலுத்தவேண்டியிருக்கிறது. அவர் விரும்பிய பொருளைக் கேட்டு அவருக்கு அதைக் கொடுத்திடுவாய்.

சி. ஆசார்யரே, தங்கள் சீர்தங்கிய பாதங்களுக்கு நான் செலுத்தவேண்டிய, தாம் விரும்பும், குரு தட்சிணை என்னவோ, அதைக் கடாட்சித் தருளவேண்டும்

மி. அப்பா, சித்தார்த்தா, உன்னுடைய மேலான அன்பே, என் மனதுக்கிசைந்த குருதட்சிணை யாகும்—ஆயினும் நான் விரும்புவது ஒன்றுளது, அதைச் செய்கிறாயா ?

சி. தங்கள் சித்தம்.

மி. அப்பா, இதுவரையில் நீ பிரம்மசர்ய ஆஸ்ரமத்திலிருந்தது போதும், இனி உன் மனதுக் கினிய மனைவியை மணந்து கிருஹஸ்தனாக வேண்டுமென்பதே.

சு. அதுதான் என் கோரிக்கையும்.

சி. ஆர்யர்களுடைய ஆக்ஞை.

மி. சந்தோஷம், நான் விடை பெற்றுக்கொள்ளுகிறேன்— சீக்ரமே விவாஹப் பிராப்திரஸ்து! [போகிறார்.]

சு. சித்தார்த்தா, இன்றைத்தினம் வேட்டையாடப் புறப்பட வேண்டுமென்று உத்தரவு செய்திருக்கிறேன்; ஆகவே, வா நீயும்.

சி. அண்ணா, வேட்டையை வெறுக்கிறது என் மனம்—

சு. சரி, உன் இஷ்டம். ஆனால் இன்றைத்தினம் விசாகம், நீ பிறந்த தினம், ஆகவே நம்முடைய நகரெங்கணும் விழாக் கொண்டாடுவார்கள். தேரூர்ந்து வேடிக்கை பார்த்து வருவோம் வா.

சி. அப்படியே செய்வோம்.

[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி.

இடம்—கபிலவாஸ்துவில் அரண்மனையில் சங்கீத மண்டபம்.

சுத்தோதனனும், விதூஷகனும் வருகிறார்கள்.

சு. பரீட்சைகளெல்லாம் முடிந்து விட்டதா?

வி. எல்லாம் முடிந்துவிட்டது.

சு. என்ன, சித்தார்த்தன் மனம் ஏதாவது மாறியதா? எந்த அரச குமரியின் எழிலினாலாவது அவன் மனம் ஆக்கிரஹிக்கப்பட்டதா?

வி. அது தவிர!—இவர் எங்கு சென்றபோதிலும் அக் கன்னிகைகளின் கடைக் கண்கள் இவரைப் பின் தொடர்ந்தனவே யொழிய அவர்களுடைய உருவம் இவரை

இரண்டாம் முறை நோக்கும்படிச் செய்ததாகவும் கண்டேனில்லை. நான் எவ்வளவோ ஜாக்கிரதையாகக் கவனித்தேன். என்னையும் இக் கல் ஸ்தம்பத்தையும் பார்ப்பதுபோல் தான், அவர்களைப் பார்க்கிறார்.

சு. விதூஷகா, வேறென்னதான் யுக்தி செய்யலாம் சொல்.

வி. ஆயினும் என் தீர்மானத்தை நான் கைவிடவில்லை ஒரு கடைசி யுக்தி தோன்றுகிறது. இப்பொழுது கன்னியர்களெல்லாம் பரிசுபெற இங்கு வருவார்கள். தாங்கள் ஏதோ வேலையிருப்பதாகச் சொல்லி, அவரையே அப் பரிசுகளைக் கொடுக்கும்படி சொல்லுங்கள். நெருங்கி வந்து அவர் கையினின்றும் அவர்கள் பரிசு பெறும் சமயத்திலாவது, எந்த அரசகுமாரியின் எழிலாவது அவர் மனதை சலனப்படச் செய்கிறதாவென்று கவனிக்கிறேன்.

சு. ஆம்! ஆம்! அது தான் யுக்தி அங்ஙனமே செய்கிறேன். விதூஷகா, நீ போய் சித்தார்த்தனை சீக்கிரம் இங்கழைத்து வா. [விதூஷகன் போகிறான்.]
எப்படியாவது சித்தார்த்தனுக்குச் சீக்கிரம் மணம் புரிவிக்கவேண்டும்.—ஜோஸ்யரும் இவனுக்கு எப்படியும் விவாகமாகிப் புத்ரசந்தானமும் முண்டாகுமென்று சொன்னாரல்லவா? ஜோஸ்யம் பொய்க்காது — ஆயினும் நாமிருக்கவேண்டிய ஜாக்கிரதையில் இருக்கவேண்டும். அன்றைத் தினம் அந்த நாவன்மரத்தின் கீழ் கண்களை மூடிக்கொண்டு கவலையுடன் உட்கார்ந்தது முதல் அடிக்கடி எதையோ யோசித்தவண்ண மிருக்கிறான். வேனிற்காலம், மழைக் காலம், பனிக்காலம், இவை மூன்றிற்கும் தக்கபடி மூன்று அழகிய மாளிகைகள் கட்டிக்கொடுத்து, அவன் வயதுக்குரிய உதாயி முதலிய தோழர்களைக் கொண்டும், வேடிக்கை விநோதங்களினாலும், அவன் மனதில் குறை யென்பது ஒன்றுமில்லா திருக்கும்படியும், எந்நேரமும் சந்

தோஷத்திலேயே இருக்கும்படியும், நான் எவ்வளவோ முயன்றும், உள்ளுக்குள்ளே ஏதோ சோகம் குடிகொண்டிருப்பதுபோல் அடிக்கடி அவன் முகத்தில் தோற்றுகிறது. துக்கத்தைத் தரத்தக்க எதுவும் அவன் கண்ணெதிர்ப்படலாகாதென்றும், அப்படிப்பட்ட சமாசாரம் அவன் காதில் விழலாகாது என்றும், எவ்வளவோ ஜாக்கிரதையாகக் கட்டுப்பாடு செய்திருக்கிறேன். கூன், குருடு, குஷ்டம், மூப்பு, பிணி, முடம் உடையவர்கள் அவன் கண்முன் வரலாகாதென்று எவ்வளவோ கவனத்துடன் காத்து வருகிறேன். இருந்தும்—அதோ அவன் வருகிறாற்போலிருக்கிறது.

[உள்ளே கோஷ்டம் "பராக்! பராக்! இளவரசர் சித்தார்த்தர் வருகிறார்."]

*மந்திரிகள் பரிவாரங்கள் புடைசூழ சித்தார்த்தர் வருகிறார். விதூஷகன் பின்னால் வருகிறான்.*

சி. [தந்தையின் பாதங்களில் நமஸ்கரிக்கிறார்.] அப்பா, நமஸ்காரம்.

சு. [கட்டியணைத்து] கண்ணே, சித்தார்த்தா, பரீட்சைகளெல்லாம் முடிந்தனவா?

சி. தங்கள் கட்டளைப்படி யாவும் முடிந்தன; இனி தாங்கள் பரிசுகளைக் கொடுக்கலாம்.

சு. மிகவும் சந்தோஷம்—சித்தார்த்தா, எனக்குக் கொஞ்சம் வேலையிருக்கிறது. கன்னியர்களைக் காத்திடச் செய்தல் நியாயமன்று. ஆகவே அவர்களையெல்லாம் இங்கே வரவழைத்து நீயே உன் கரத்தால் அவர்களுக்குப் பரிசுகளை அளிப்பாய்.

சி. தங்கள் சித்தம்.

[விதூஷகனுக்குச் சைகைசெய்துவிட்டு சுத்தோதனன் ஒரு புறமாய்ப் போகிறார்.]

வி. இளவரசே, இப்படி சிம்மாசனத்தில் வீற்றிருங்கள். நான் போய் அவர்களையெல்லாம் அழைத்து வருகிறேன்.

[போய் கன்னியர்களை அழைத்துக் கொண்டு வருகிறான். அவர்கள் ஒரு புறமாய் நிற்கின்றனர்.]

மந்திரியாரே, பரீட்சையில் வென்றவர்களின் பெயரை ஒவ்வொன்றாகச் சொல்லிக்கொண்டு வாரும். நான் அந்தந்த பரிசுகளை எடுத்து இளவரசர் கையில் கொடுத்துக்கொண்டு வருகிறேன். அவர் தனது கரத்தால் அளிக்கட்டும்.

ம. சித்திரரேகை !

[சித்திரரேகை சித்தார்த்தர் எதிரில்வந்து நாணித் தலை குனிந்து நிற்கிறாள்.]

சித்திரம் வரைவதில் பத்மினி இவளைப்போல்
எத்திசை தேடியுமே எங்கணும் காண்பரிதே.

வி. சித்திரம் வரைவதற்குப் பரிசு—தந்தப்பேழை—சித்திரக்கோல் முதலியன வைப்பதற்கு.

[இளவரசரிடம் கொடுக்க அதை அவர் சித்திரரேகையிடம் கொடுக்கிறார்.]

இளவரசே, இக்கன்னிகையைக்கொண்டு உம்முடைய படம் ஒன்று எழுதிவைத்தால் எவ்வளவு அழகாயிருக்கும் !

சி. உம்—பிறகு. [மந்திரியை பார்க்கிறார்.]

ம. சரஸ்வதி !

[சரஸ்வதி வந்து தலை குனிந்து நிற்கிறாள்.]

மகரயாழதனால் மண்ணுளோர் மயங்கச்செய்
நகரம் புகழுமிந் நாரீமணி இவள்தானே.

வி. வீணை வாசித்ததின் பரிசு—நவரத்னகசிதமானவீணையே.

[இளவரசரிடம் கொடுக்க, அவர் சரஸ்வதியிடம் கொடுக்கிறார்.]

அந்த சரஸ்வதிக்கு பிரம்மதேவன் வாய்த்தபடி. இந்த சரஸ்வதிக்கு யார் வாய்க்கப் போகிறார்களோ ?

சி. பிறகு ?

ம. பார்க்கவி !

[பார்க்கவி வந்து தலை குனிந்து நிற்கிறாள்.]

பரத சாஸ்திரத்தில் பாரினி லிவட்கிணை
இரதியு மாகாளென் றியம்பலாம் மன்னவா.

வி. பரதசாஸ்திரப் பரிசு—பாதத்திற்குப் பொன் சலங்கை.

[அதை சித்தார்த்தர் கையில் கொடுக்க, அவர் பார்க்கவி கையில் கொடுக்கிறார்.]

அடடா! கையில்தானா கொடுத்தீர் !—உங்களிஷ்டம்.

ம. சதுரிகை !

[சதுரிகை வந்து தலை குனிந்து நிற்கிறாள்.]

சதுரங்கம் தன்னிலே சதுரிகையைவிட
சதுரானபேரில்லை தரணிதன் மீதிலே

வி. சதுரங்கப்பரிசு—பொன்னாலான சதுரங்கப் பலகையும் காய்களும்.

[அவைகளை சித்தார்த்தர் கையில் கொடுக்க அவர் சதுரிகைக்குக் கொடுக்கிறார்.]

உம்—என்னவென்றாலும் எடதிளவரசரை வெல்லமுடிய வில்லையே அம்மா உன்னால் !

சி. அப்புறம் ?

ம. சாம்பவி !

[சாம்பவி வந்து தலை குனிந்து நிற்கிறாள்.]

பரியை யோட்டுவதில் பற்குனன் மனைவியும்
சரியிலட்கென்றேதான் சாற்றறு மாகாதையா

வி. சாரத்யம் செய்வதற்குப் பரிசு — நவரத்னகசிதமான சாட்டை.

[அதை கௌதமர் கையில் கொடுக்க; அவர் அதைச் சாம்பவி கரத்தில் கொடுக்கிறார்.]

இளவரசே, நமக்கு—சரியான ஒரு சாரதி வேண்டியிருக்கிறது—

சி. மந்திரி; பிறகு ?

[இப்படியே மற்ற பரிசுகளை வாங்கிச் செல்கின்றனர். எல்லாப் பரிசுகளும் கொடுத்தான பின், இதுவரையில் ஒரு புறமாய் நின்று கொண்டிருந்த யசோதரை, சித்தார்த்தர் எதிர் வந்து தலை குனியாது நிற்கிறாள்.]

ய. எனக்கொன்றும் பரிசில்லையா ?

சி. [முகம் மாறி] பரிசுகளெல்லாம் கொடுத்தாயது — ஆயினும் நங்காய், உன் அழகிற்கும் அருங் குணத்திற்கும் எற்ற பரிசு அவைகளில் ஒன்றுமில்லை — ஞானிலம் போற்றும் நற்குணவதியாகிய உனக்கு நான் கொடுக்கத்தக்க பரிசு இது ஒன்றுதா னிருக்கிறது, தயைசெய்து பெற்றுக் கொள்.

[தன் கழுத்திலணிந்திருந்த மரகத மணித்தாவடத்தைக் கழற்றி அவளது கழுத்திலிடுகிறார். பரிவாரங்களெல்லாம் சந்தோஷத்தினால் ஆரவாரிக்கின்றனர்.]

வி. ஆஹா ! சிம்ஹம் கண்ணியிற்பட்டது ! கண்ணியிற்பட்டது !
[ஒரு புறமாக ஓடுகிறான்.]

[சித்தார்த்தர் யசோதரையுடன் ஒருபுறமாகப் பேசுகிறார்.]

விதூஷகன் சுத்தோதனராஜனை அழைத்துக்கொண்டு வருகிறான்.

வி. அரசே! அப்பொழுதே சொன்னேனே ! நரசிம்மமாயிருந்தபோதிலும் நாரியின் கண்ணிற்பட்டால் கஷ்டம் தான்—நீரே பாரும்.

சி [யசோதரையுடன் அரசன் அருகில் வந்து பணிந்து] அப்பா, அன்று நான் ஆசார்யருக்குச் செய்த வாக்குதத்தத்தின் படியும், உமது இச்சையின் படியும், கிரஹஸ்தாஸ்ரமத்தை மேற்கொள்ளத் தீர்மானித்தேன். என் மனதுக்கினியவள் இம்மாது யசோதரையே—ஆகவே, இவளுடைய தந்தைக்கு ஓர் தூதனை அனுப்பி இவளை நான் வரிப்பதாகச் சொல்லும்.

சு. இதெல்லாம் தெய்வீகமென்றே எண்ணுகிறேன் நான். என் மைத்துனனாகிய சுப்பிரபுத்தனே இவ்விடம் வந்திருக்கிறார். சற்று முன்பாக அவருடன்தான் பேசிக்கொண்டிருந்தேன். விதூஷகா, நீ போய் நான் இங்கு வரவேண்டுகிறேனென்றுசெல்லி அழைத்துவா அவரை.
[விதூஷகன் விரைந்து போகிறான்.]

ஆயினும், அப்பா கௌதமா, இதில் ஒரு கஷ்டமிருக்கிறது—தேவதத்தன் முதலிய அரசகுமாரர்களெல்லாம் தன்னிடம் வந்து யசோதரையைத் தங்களுக்கு மணம் புரிவிக்கும்படி வற்புறுத்துவதாகச் சொல்லிக்கொண்டிருந்தார் அவர்

விதூஷகன் சுப்பிரபுத்தராஜனை அழைத்துக்கொண்டு வருகிறான்.

சுப். அப்பா, நீ கூறுவது உண்மைதானா?

வி. என்னைக்கேட்கவேண்டாம், அவர்கள் கண்களைக்கேட்டுப் பாருங்கள். "கண்ணோடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனுமில." என்று ஒரு கிழவனார் சொல்லி யிருக்கிறார்.

சி. வாருங்கள் மைத்துனரே.

[சித்தார்த்தர் அவருக்கு நமஸ்காரம்செய்கிறார். யசோதரை தன் பிதாவின் பாதத்தில் பணிகிறாள்.]

சுப்பிரபுத்தராஜனே, இங்கு நடந்த விர்த்தாந்தங்களையெல்லாம் கேட்டீரோ?

சுப் கேட்டேன்—எனக்கு இந்த சம்பந்தம் மிகவும் சம்மதிதான்—ஆயினும் சாக்கியர்களாகிய நமக்குள் எந்த அரசகுமாரியையாவது ஒருவன் மணம்புரிய விரும்பினால் அப்பெண்மணியை வரிக்கும் மற்ற அரசகுமாரர்களை விட, க்ஷத்ரியர்களுக்குரிய வில் வித்தை, வாள் வித்தை, யானையேற்றம், குதிரை யேற்றம் முதலியவைகளில் அதிக மேம்பட்டவன் தான் என்று ரூபிக்கவேண்டிய வழக்கம் ஒன்றுண்டே—அதற்கென்ன செய்கிறது என்று யோசிக்கிறேன்; அதிலும் நமது சித்தார்த்தன் கல்வியின் மீதே கவனமுள்ளவனா யிருந்தவனாச்சதே— இவ்வித்தைகளில்—

சி. எனக்கு பாண்டித்ய முண்டோ இல்லையோ என்று நீரே காணலாம். அவைகளில் திறமில்லாதவனாயின் யசோதரையை மணக்க மாத்திரம் திறமுள்ளவன் என்று எண்ணிடேன். ஆகவே இன்றைக்கு ஏழாம் நாள் உமது மகளுக்கு சுயம்வரம் என்றும், அன்றைத்தினம்

வில், வாள், குதிரை யேற்றம், யானையேற்றம் முதலிய பயிற்சிகளில் எந்த அரசகுமாரன் மற்றவர்களை வெல்கிருனோ அவனுக்கு உமது மகள் மணமாலை சூட்டுவாள் என்றும், அரசகுமாரர்களுக்கெல்லாம் திருமுகம் அனுப்பும். அன்றைத்தினம் வருபவர்களை யெல்லாம் ஜெயித்து யசோதரையின் மணமாலையைப் பெற எனக்குத் திறமை யிருக்கிறதோ இல்லையோ எனக் காண்பிக்கிறேன்.

சுப். சரி, அப்படியே செய்கிறேன், வா, யசோதரை நமது விடுதிக்குப் போவோம்.

[எல்லோரும் போகிருர்கள்.]

காட்சி முடிகிறது.



## மூன்ரும் காட்சி.

இடம்—கபிலவாஸ்துவில் ஒரு மைதானம்: நடுவில் ஓர் சித்ரமண்டப மிருக்கிறது.

அதில் ஒரு புறமாகப் பரிவாரங்கள்சூழ சுத்தோதனன், சுப்பிரபுத்தன், முதலிய அரசர்களும், தேவதத்தன், நந்தன், அர்ஜுனன், முதலிய அரச குமாரர்களும் வீற்றிருக்கின்றனர். மற்றொருபுறம் கௌதமீ முதலிய ராஜஸ்திரீகள் இருக்கின்றனர்.

விதூஷகன் இங்குமங்குமாக ஓடிக்கொண்டிருக்கிருன்.

சுப. எல்லாம் சித்தமா யிருக்கிறதா?

வி. எல்லாம் சித்தமா யிருக்கிறது, கலியாணப் பெண்ணும் கலியாணப் பிள்ளையும்தான் இன்னும் வரவில்லை.

சு. விதூஷகா, இதற்குள்ளாக நிச்சயித்து விடாதே.

வி. உமக்கு சந்தேக மிருக்கலாம், எனக்கில்லை.—அதோ கலியாணப் பெண் வருகிருற்போ லிருக்கிறது.

சிவிகையை விட்டிறங்கி இருபக்கங்களிலும் தாதியரால் தாங்கப்பட்டு யசோதரை வருகிறாள்.
அருகிற்சென்ற தந்தையையும் மாமனையும் கௌதமியையும் பணிந்துவிட்டு ஒரு புறமாய்ப்போய் உட்காருகிறாள்.

தே. எங்கே சித்தார்த்தன்? வில் வித்தை கற்கப் போயிருக்கிறானா என்ன?

ந. இல்லை, துருப்பிடித்த தன் வாளைத் தீட்டிவரப் போயிருப்பான்.

அ. ஒரு வேளை அவனுடைய குதிரை அவனை எங்கேயாவது இழுத்துக்கொண்டு போய்விட்டதோ என்னவோ?

வி ஐயா! ராஜ குமாரர்களே! கொஞ்சம் பொறுங்கள், அவசரப்படாதீர்கள்; எங்கள் அரச குமாரரை ஜெயித்துவிட்டு பிறகு எவ்வளவு வேண்டுமென்றாலும் பேசுங்கள், கேட்கிறேன். இப்பொழுது ஏசுவதில் என்ன பிரயோஜனம்?—அதோ வந்துவிட்டார் கலியாணப் பிள்ளை!

சித்தார்த்தர் கண்டகத்தின்மீது வருகிறார்.
உதாயி முதலிய நண்பர்கள் கைலாகு கொடுக்க, இழிந்து, தன் தந்தை மாமன் இருக்குமிடம் போகிறார்.

சி. அப்பா, மாமா, நமஸ்காரம்; என்னை மன்னிக்கவேண்டும், காலைக்கடனை முடித்துவரச் சற்றே நேரமாயது.

சுப். சித்தார்த்தா, பெரிதன்று — இனி பரீட்சைக்கு ஆரம்பம் செய்வோம். எனது மகளை வரிக்கும் ராஜகுமாரர்களே! வில் வித்தை வாள் வித்தை குதிரை யேற்றம் யானை யேற்றம் முதலிய க்ஷத்ரியர்களுக்குரிய பயிற்சிகளில் உங்கள் திறத்தை இச்சபை யறியக் காட்டுங்கள். அவற்றால் மற்றெல்லோரையும் வெல்லுபவனுக்கு என் மகள் மணமாலை சூட்டுவாள்.

வி. ஐயா, வாயால் முன்பு பேசின ராஜகுமாரர்களே, இப்பொழுது கொஞ்சம் கையால் காட்டுங்கள் உங்கள் திறமையை. முதலில் என்ன பரீட்சை அரசே?

சுப். வில் வித்தை—எதோ, ஒவ்வொருவராய் உங்கள் வில் திறத்தைக் காட்டுங்கள்.

ந. அதோ அப்பித்தளையாலாகிய பறையை ஆறு கூவொலித் தொலைக்கப்பால் வையுங்கள். அதைநான் எய்கிறேன்.

[வேலை ஆட்கள் எடுத்து விரைந்து செல்கின்றனர்.]

வி. இவ்வளவு தூரம்தானா? என் பேரன் இதை எய்துவிடுவானோ?

ந. பார்ப்போம் அதை!

[வில்லை வளைத்து நாணேற்றி எய்கிறான்; உள்ளிருந்து சப்தம் "பட்டது! பட்டது!"]

அ. அதற்குமேல் ஒரு கூவொலித் தொலைக்கப்பால் வையுங்கள் அதை.

வி. இதை எய்ய என் பிள்ளை போதும்.

அ. உன் பிள்ளையை வரச்சொல் இங்கே!

[வில்லை வளைத்து எய்கிறான். உள்ளே சப்தம் "ஒரு புறம் துளைத்தது! துளைத்தது!"]

தே. அதற்கப்புறம் ஒரு கூவொலித் தொலைக்கப்பால் வையுங்கள்.

வி. ஆம், இது கொஞ்சம் சுமார், இதை எய்ய நான் தான் வில்லை வளைக்கவேண்டும்.

தே. வளைத்துப்பார், கஷ்டம் தெரியும்!

[வில்லை வளைத்து எய்கிறான். உள்ளேயிருந்து சப்தம் "இரண்டுபக்கமும் ஊடுருவிச்சென்றது ஊடுருவிச்சென்றது!"]

சி. அதற்கப்புறம் இரண்டு கூவொலித் தூரம் வையுங்கள் குறியை.

[யசோதரையை நோக்கி]

ஒன்றும் அஞ்சாதே.

வி. நானு பயப்படுகிறவன்?—ஓஹோ! அங்கேயா சொன்னீர்கள்!

சி. கொடுங் களிப்படி வில்லை.

[வில்லை எடுத்து வளைக்க, அது இரண்டு துண்டமாய் ஒடிந்து விழுகிறது.]

இதென்ன விளையாடுகிற வில் அல்லவோ? இதைக் கொண்டா பரீட்சை பார்ப்பது! இக்ஷ்வாகு வம்சத்தி லுதித்த ராஜ குமாரர்கள் உபயோகிக்கத்தக்க சாக்கிய தனுஸ் ஒன்று மில்லையா?

பிரதானி. இளவரசே, நமது அரண்மனையின் பூஜாக்கிரஹத்தில் சிம்ஹபானு மஹாராஜாவின் தனுஸ் அநேக நூற்றாண்டுகளாக வைக்கப்பட்டிருக்கிறது. அதை நாணேற்ற வல்லாரைக் கண்டிலோம்; நாணேற்றி எய்ய வல்லாரைப் பற்றிக் கேட்டுமிலோம்.

சி. அப்படியா? சுத்த வீரனுக்குரிய அந்த தனுஸைக் கொண்டுவரச் சொல்லுங்கள்.

சு. மந்திரி, நமது ஆட்களைக்கொண்டு அதை விரைவில் எடுத்துவரச் சொல்லுங்கள். அப்பா, சித்தார்த்தா, அது மஹத்தான சாபமாச்சுதே! வீணில் நீ—

சி. அப்பா, உமக்கு மனதில் சந்தேகமே வேண்டாம், கொஞ்சம் பொறுங்கள்.

சுப். அப்பா, கௌதமா, அந்த வில்லைப்பற்றி நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். அதை மாத்திரம் நீ வளைக்க வல்லவனுயின் நீ எல்லோரையும் விடச் சிறந்த வில்லாளியே.

சி. தயவுசெய்து கொஞ்சம் பொறுங்கள்.

[ஆட்கள் அந்த வில்லைச் சுமந்து கொண்டுவருகின்றனர்; அதை அவர்களிடமிருந்து வாங்கி முழங்காலில் வைத்து வளைத்துப் பார்த்து.]

வீரர்களே, இதை வளைத்து அம்பை எய்யுங்கள்.

[மூவரும் வந்து வளைக்கப் பார்த்து முடியாமற் போய்த் திகைத்து நிற்கின்றனர்.]

இப்படிக் கொடுங்கள்.

[சுலபமாய் அதை நாணேற்றி ஒரு அம்பைத் தொடுத்து எய்கிறார். உள்ளே சப்தம் "இரண்டு பக்கமும் ஊடுருவி எங்கேயோ பறந்தது அம்பு! எங்கேயோ பறந்தது அம்பு!"]

எல்லோரும். நல்லது! நல்லது! [ஆரவாரிக்கின்றனர்.]

சு. [ஒரு புறமாக] சித்தார்த்தனுக்கு இவ்வளவு சக்தி எங்கிருந்து வந்தது?

சுப். [ஒரு புறமாக] எனக்கும் அது தான் ஆச்சரியமாயிருக்கிறது.

ந. சுப் பிரபுத்த ராஜனே! ஒருவித பரீட்சையில் தீர்மானித்து விடலாகாது—வாள் வித்தையிற் பரீட்சை பாருங்கள்.

சுப். அப்படியே, வாட் பயிற்சியில் உங்கள் சாமார்த்தியத்தைக் காட்டுங்கள்.

ந. நம்முள் ஒவ்வொருவரும் ஒரே வெட்டில் எவ்வளவு பருமனை வஸ்துவை வெட்டமுடியுமோ—பார்ப்போம்.

தே. [தன் வாளை உருவி] இதோ இவ்விருட்சத்தை எனது வாளால் ஒரே வெட்டால் வெட்டுகிறேன்.

[வெட்டுகிறான்.]

வி. கொஞ்சம் பொறுங்கள்—இம்மரம் எவ்வளவு பருமன் என்று அளக்கிறேன்—ஆறு விரல் பருமனிருக்கிறது. சரி, அப்புறம்.

அ. அதனினும் பருமனான இம்மரத்தை நான் வெட்டு கிறேன். [வெட்டுகிறான்.]

வி. [அதை அளந்து பார்த்து] ஆம், அதனினும் பெரியது தான்; இது, ஏழுவிரல் பருமனிருக்கிறது.

ந. விதூஷகரே, இதை அளந்து பாரும், அதைவிட இது பருமனா யிருக்கிறதா யில்லையா வென்று.

வி. [அளந்து பார்த்து] ஆம், இது ஒன்பது விரல் பருமனிருக் கிறது.

ந. இதோ பாருங்கள்.

[ஒரே வெட்டாய் அதை வெட்டி யெறிகிறான்; சிலர் கர கோஷம் செய்கிறார்கள்.]

வி. இளவரசே, இப்படி வாரும். இந்த மரம் பத்து விரல் பருமனிருக்கிறது இதைப் பார்க்கிறீரா?

சி. வேண்டாம்—இதோ நந்தன் வெட்டியது போன்ற இரண்டு மரங்கள் ஒன்றா யிருக்கின்றன, அவற்றின் பரு மனை அளந்துகொள்.

வி. [அவைகளை அளந்து பார்த்து] இளவரசே, ஒவ்வொன்றும் ஒன்பது விரல் பருமன் இருக்கிறதே!—கொஞ்சம் யோசித்துப் பாரும்.

சி. வெட்டிய பிறகு.

[வாளை யுருவி வெட்டுகிறார்; மரங்கள் விழாது நிற்கின்றன.]

ஜனங்கள். ஆ! தவறியது! தவறியது!

ந. வாள் பிழைத்தது!

[நகைக்கிறான்.]

ய. அந்தோ!

[கண்ணைக் கையால் மூடிக்கொள் ளுகிறாள்.]

தே. சித்தார்த்தன் வெட்டினது மரங்களையோ காற்றையோ?

[காற்றடிக்க இரண்டு மரங்களும் வெட்டப்பட்டனவாய்ச் சாய்ந்து விழுகின்றன.]

ஜனங்கள். வெட்டப்பட்டன! வெட்டப்பட்டன இளவரசரால்!

வி. ஐயா! தேவதத்தரே, காற்று வெட்டப்பட்டதோ, மரங்கள் வெட்டப்பட்டனவோ பார்த்தீர்களா? இப்பொழுது என்ன சொல்லுகிறீர்கள்?

ஜனங்கள். இளவரசரே வென்றார்! இளவரசரே வென்றார்!

[கரகோஷம் செய்கின்றனர்.]

ய. ஆ! [கண் விழித்துப் பார்த்துக் களிக்கிறாள்.]

வி. ஏனையா, இன்னும் ஏதாவது பரீட்சைக்கு சித்தமாயிருக்கிறீர்களா? இதனுடன் போதுமா?

அ. குதிரை யேற்றம் ஒன்றிருக்கிறது—அதிலும் உமது இளவரசர் வெல்வாரானால் அரசகுமரியின் மாலைக்கு அவரே உரியவராவர்.

சுப். சரி, அதையும் பார்த்துவிடுவோம்—நீங்கள் நால்வரும் உங்கள் குதிரைகளின்மீது ஏறி இவ் வெளி நிலத்தைச் சுற்றி ஓருதரம் வாருங்கள்; யார் முன்பாக வருகிறீர்களோ பார்ப்போம்.

அ. அப்படியே செய்வோம்—வாருங்கள் அரசகுமாரர்களே!

[நால்வரும் தங்கள் தங்கள் குதிரைகளின் மீது ஏறுகிறார்கள்.]

வி. இளவரசே, தாற்றுக்கோல் வேண்டாமா உமக்கு?

சி. கண்டகத்துக்கு வேண்டியதில்லை. அப்படி வேண்டியதாயிருந்தாலும் அதை உபயோகித்து அதற்குக் கஷ்டம் கொடுத்து நான் வெல்ல விரும்பேன்.

சுப். புறப்படுங்கள் !

[சைகை செய்ய நால்வரும் வேக மாய்ப் புறப்படுகின்றனர்.]

வி. அடடா ! என்ன இளவரசர் பின் தங்குகிருர் ! இப் பொழுது சண்டகத்துக்குக் கஷ்டம் கொடுக்கலாகாது என்று பார்த்தால் முடியுமா ?—தேவதத்தர் முன்பு போகிருர் ! இல்லை இல்லை ! நந்தர் ! நந்தர் !—ஆ ! ஆ ! அர்ஜுன ராஜன் வேகமாய் வருகிருர் ! பிடித்து விட் டார் அவர்களை ! பிடித்துவிட்டார் அவர்களை !—கண்ட கம் இப்பொழுது தான் வேகமாய்ப்போக ஆரம்பிக் கிறது ! மறுபடியும் தேவதத்தர் முன்பு வந்துவிட்டார் ! இல்லை இல்லை ! அர்ஜுன ராஜன்தான் ! நந்தரும வந்து விட்டார் ! மூவரும் ஒன்ருய் வருகிருர்கள் ! தேவதத்தர் முந்துகிருர் ! இல்லை அர்ஜுன ராஜன் ! தேவதத்தர் ! அர்ஜுனர் !—அர்ஜுனர் ! தேவதத்தர் ! இல்லை இல்லை ! இளவரசர் ! இளவரசர் ! பிடித்து விட்டார் பிடித்து விட்டார் ! இளவரசர் ! இளவரசர் ! ஜெயிக்கிருர் ! ஜெயிக்கிருர் !

மற்றவர். இளவரசர்தான் ! இளவரசர்தான் !

[ஆரவாரிக்கின்றனர்.]

[நால்வரும் குதிரைகளை விட் டிறிந்து வருகின்றனர்.]

வி. என் ஐயா, இன்னும் ஏதாவது பார்க்வேண்டியிருக் கிறதா ? இப்பொழுதாவது ஒப்புக்கொள்கிறீர்களா எங்கள் இளவரசர் வென்ருர் என்று ?

ந. உங்கள் இளவரசர் வென்றதென்ன இதில் ? கண்டகம் வென்றது என்று சொல். எங்களுக்கும் கண்டகத்தைப் போல் ஒரு சிறந்த குதிரை யிருந்திருக்குமாயின் நாங் களும் வென்றிருப்போம்.

வி. அப்படி போடுங்கள் ஒரு போடு !

ந. அரசே, குதிரைப் பயிற்சியில் சாமர்த்தியத்தைப் பார்க்க வேண்டுமென்றிருந்தால், இதுவரையில் பழக்கப்படாத ஓர் புதிய புரவியைக்கொண்டுவரச் சொல்லுங்கள், அதை அடக்கி ஆளுவதில், அவரவர்கள் சாமர்த்தியம் உண்மையில் வெளியாகும்.

சு. சுப்பிரபுத்த ராஜனே, இதுவரையில் பார்த்த பரீட்சை போதாதா ? இன்னும்—

சி. அப்பா, தாங்கள் ஏன் அஞ்சுகிறீர்கள் ? அதையும் பார்த்துவிடலாமே, கொண்டுவரச்சொல்லுங்கள் பழக்கப் படாத கொடுங் குதிரை யொன்றை !

சுப். பிரதான், உமது அரண்மனையிலுள்ள பழக்கப்படாத குதிரை யொன்றை கொண்டுவரச் சொல்லும்.

பி. அரசே, ஒருவருக்கு மடங்காத, யாராலும் பழக்கமுடியாத கரும்புரவி யொன்று இங் கருகாமையிற்கட்டப்பட்டிருக்கிறது, அதை சங்கிலிகளால் பிணைத்துக்கொண்டு வரச் சொல்கிறேன். [பிரதானி போகிருர்.]

சு. அது மிகவும் கொடும் புரவியாச்சுதே! யாராலும் பழக்க முடியாது என்று கைவிடப்பட்ட தாச்சுதே—

சி. அப்பா, உமக் கச்சமேன் ? இவர்களால் முடிவது என்ருல் முடியாமற் போகிறதோ பார்ப்போம்—

பிரதானி திரும்பி வருகிருர்.
நான்கு மல்லர்கள் ஒரு கரும்புரவியைச் சங்கிலிகளால் கட்டிக்கொண்டு வருகின்றனர்.

வி. யார் முதலில் பரீட்சை பார்க்கப் போகிறது? — ஏனையா நந்தரே நீர் தான் பாருமே! நிரம்ப பேசினீரே!

ந. அதற்கென்ன ?

[குதிரையின் மீதேறப் பார்க்க அவரைக் கீழே தள்ளி விடுகிறது.]

வி. பாவம்! குதிரைக்குக் கொடுக்கப் புல்லைப் பறிக்கிறார்!— இப்படிவந்து உட்காருங்கள். தேவதத்தரே, நீங்கள் என்ன சமாசாரம்?

தே. விதூஷகரே! நீர் பேசாமலிரும்; உம்முடைய பேச்சரவத்தைக் கேட்டு பயப்படுகிறது அக் குதிரை.

[அதன் மீதேறப் பார்க்க, அவரையும் கீழே தள்ளிவிடுகிறது.]

வி. இனிமேலே பேசலாமல்லவா? கீழே தள்ளி ஆச்சுதே!— இப்படிவந்து உட்காருங்கள், ஆடையைத் துடைத்துக் கொண்டு—பிறகு அர்ஜுனராஜன்.

அ. இதோ!

[அக்குதிரையின் முதுகின்மீதேறி கொஞ்சம் அதை நடத்துகிறார். பிறகு அது அவர் காலை வாயால் பற்றிக் கடித்துக் கீழே வீழ்த்தி விடுகிறது.]

வி. அடடா! ஏறினார் என்று சொல்ல வாயெடுத்தேன்— இதற்குள்ளாக இறங்கினார் என்று சொல்ல வேண்டி வந்ததே!—ஆனால் அவர்களைவிட இவருக்கு ஒன்று லாபம்—காலில் கடி! காயத்தைக் கட்டிக்கொண்டு இப்படி வந்து உட்காருங்கள்—சுப்பிரபுத்த ராஜனே, இவர்களில் யாராவது இதை அடக்கி ஆண்டிருந்தால், எங்கள் இளவரசர் அவர்களைத் தோற்கடிக்க வேண்டும். அப்படி ஒன்றும் நேரிடாதிருக்கும்பொழுது எங்கள் இளவரசர் எதற்காகக் கஷ்டப்படவேண்டும்?

சி. விதூஷகா, நீயும் அஞ்சுகிறாயா என்ன?

[குதிரை யருகிற் போகிறார்.]

ஜனங்கள். இளவரசே! அதன் அருகே போகவேண்டாம்! போகவேண்டாம்! அது குதிரையன்று அது கூளியே! கூளியே!

சி. [கை யமர்த்தி] ஒன்றும் பயப்படாதீர்கள்!

[அதனருகிற் சென்று மெல்ல அதைத் தடவிக் கொடுத்து அதன் காதில் ஏதோ ஓதி தட்டிக்கொடுத்து, அதன் மீதேறி மைதானத்தைச் சுற்றி வருகிறார்.]

ஜனங்கள். என்ன ஆச்சரியம்! என்ன ஆச்சரியம்!

[ஆரவாரிக்கின்றனர்.]

தே. ஏதோ மந்திர பலமென்றே எண்ணுகிறேன்.

வி. எல்லாம் போய் கடைசியில் மந்திரத்தில் முடிந்ததா? மந்திரத்தினால் மாங்காயும் விழாதென்கிறார்களே, கேட்டதில்லையா?

சுப். இவ்வளவு அபாரமான சக்தி சித்தார்த்தனுக்கு இருக்கிறதென்று நான் கனவிலும் நினைக்கவில்லை; இவ்வளவு பயிற்சியும் எங்கிருந்து வந்ததோ?

ச. உண்மையை உரைக்குமிடத்து எனக்கும் ஆச்சர்யமாகத்தானிருக்கிறது! எப்படிமுடியுமோ என்று மிகவும் அஞ்சியிருந்தேன்! எல்லாம் தெய்வ கடாட்சம்.

[சித்தார்த்தர் திரும்பிவந்து குதிரையைவிட்டிழிகிறார்.]

வி. ஐயா, ராஜ குமாரர்களே! இதுவரையில் பார்த்தது போதுமா, இன்னும் ஏதாவது பரீட்சை பார்க்கவேண்டுமா? குதிரை யேற்ற மாச்சுது—யானை யேற்றம் பார்க்க வேண்டுமா?—எல்லாம் பௌனமா யிருக்கிறார்கள்—அவர்கள் புத்திசாலிகள். குதிரை கொஞ்சம் உயரம், யானை அதிக உயரமாச்சுதே! அதன் மீதிருந்து கீழே விழுந்தால் ஆவியே போய்விடுமே! சரி, தீர்ந்தது.—என்ன சுப்பிரபுத்த ராஜனே, இனி தடையென்ன?

சுப். இனி தடை யொன்றுமில்லை.

[சித்தார்த்தர் அருகிற் சென்று]

சுப். அப்பா, சித்தார்த்தா, நீயே வென்ருய்! அப்பா, கண்மணி, நீ எல்லோரைப் பார்க்கிலும் மேலானவனுயிருப்பதைக் கண்டு மகிழவேண்டுமென்றே இவ்வாறு உன்னைப் பரீட்சித்தது. ஆயினும் சுகத்தில் வாழ்ந்து சாஸ்திரங்கள் பயிலுவதிலேயே காலம் கழித்த உனக்கு எந்த மந்திர பலத்தினுல் இவ்வளவு வீரம் வந்ததென எனக்கே ஆச்சர்யமாயிருக்கிறது.—அப்பா கண்மணி, நீ ஜெயித்ததை நீ பெற்றுக்கொள்—யசோதரா!

ய. அப்பா—இதோ வந்தேன்.—

[சித்தார்த்தர் அருகில் வந்து, முக்காட்டை நீக்கி, அவரை நமஸ்கரித்து, மணமாலையை அவர் கழுத்திலிட்டு, பாதத்தில் பணிந்து]

பிராணநாதா, அடியாள் உமது அடைக்கலம்.

சி. கண்ணே! [பரிந்தெடுத்து கையைப் பற்றுகிருர்.]

சுப். கண்ணே! சித்தார்த்தா, இதுவரையில் என் குமாரத்தியாயிருந்தாள். இன்று முதல் உன் மனைவியாளுள். அவளதுயிர் உன் கரத்திலிருக்கிறது. அவள் மனத்திற்குத் துயர் என்பதே கனவிலும் நேராமல் அவளுடன் நீடூழி காலம் சுகமாய் வாழ்ந்து எங்களையெல்லாம் சந்தோஷிக்கச் செய்வாயாக!

சு. அப்பா, என் குலத்தை ஈடேற்ற வந்த என் அருஞ்செல்வமே! அதுதான் என் கோரிக்கையும்.

சி. எல்லாம் தங்களுடைய பாக்கியம்.

[யசோதரையுடன் அவர்களிருவர்களுடைய பாதங்களிலும் வணங்குகிருர்.]

சு-சுப். சீக்கிரமேவ விவாஹ சித்திரஸ்து, சுபுத்ரா வாப்திரஸ்து!

[ஆசீர்வதிக்கின்றனர்; ஆகாயத்தில் நகைக்கும் சப்தம்—சித்தார்த்தர் செவியில் மாத்திரம் படுகிறது.]

சு. வாருங்கள் எல்லோரும், போவோம். விவாஹத்திற்குரிய மங்கள காரியங்களை உடனே ஆரம்பம் செய்யவேண்டும்.

[சங்கீதம் முழங்குகிறது, எல்லோரும் போகிறார்கள்.]

சி. [மேலே உற்றுப் பார்த்து] யார் நகைப்பது ?

காட்சி முடிகிறது.



# மூன்றும் அங்கம்

## முதற் காட்சி.

இடம்—அரண்மனையில் சித்தார்த்தருக்காகப் பிரத்யேகமாய் ஏற்படுத்தப்பட்ட சலவைக்கல் மண்டபம்.

பட்டு வஸ்திரங்கள் பரப்பப்பட்ட வெள்ளி மஞ்சமொன்றில் யசோதரையின் துடைமீது தன் தலை வைத்து சித்தார்த்தர் உறங்கிக்கொண்டிருக்கிறார். யசோதரை மெல்ல காற்றெழ விசிறிக்கொண் டிருக்கிறாள்.

ய. [பாடிக்கொண்டிருந்த பாட்டை முடித்து] உறங்கி விட்டார் போலிருக்கிறது—பாட்டை நிறுத்துவோம்—அயர்ந்து உறங்குவதுபோ லிருந்தும் மனத்தில் ஏதோ கிலேச முறுவதுபோல் முகத்தில் தோன்றுகிறதே! இவர் மனத்தை வருத்தும் கிலேசம் என்னவோ தெரியவில்லை—மஹாராஜாவின் கட்டளைப்படி இவருக்குத் துயரம் என்பது சிறிது மில்லாதபடி எவ்வளவோ ஜாக்கிரதையாகத் தான் நான் பார்த்து வருகிறேன். ஆயினும் மிகவும் சந்தோஷமாய் உல்லாசமா யிருக்கும் சமயத்தில் கூட இவர் எதையோ ஒன்றை அடிக்கடி யோசிப்பதுபோல் என் மனதில் படுகிறது.—

சி. [உறக்கத்தில்] உலகமே! உலகமே! நீ துயருறுவதை நான் அறிகிறேன்! அறிகிறேன்! உன்னை அதினின்றும் விடுவிக்க வருகிறேன்! வருகிறேன்!

ய. தூக்கத்தில் பேசுகிறார் போலும்!—இவர் கூறிய மொழிகளைக் கேட்கும்பொழுது, அசிதமஹரிஷி கூறியதாக மஹாராஜா என்னிடம் ரகசியமாகக் கூறியபடி இவர் துறவியானால் என் கதி என்னவது என்று ஏங்குகிறது என் மனம்.

சி. காலம் வந்துவிட்டது! காலம் வந்துவிட்டது!
[கண்விழிக்கிறார்.]

ய. பிராணநாதா! என்னைப் பிரிய அல்லவே! என்னைப்பிரிய அல்லவே! [கண்ணீர் விடுகிறாள்.]

சி. கண்மணி, ஏன் கலங்குகிறாய்? என்ன நேர்ந்தது? நான் உறக்கத்தில் ஏதாவது பேசினேனா என்ன?
[கண்ணீரைத் துடைக்கிறார்.]

ய. பிராணநாதா! நான் என்னென்று சொல்லுவேன்! என் உடலெல்லாம் நடுங்குகிறது பயத்தினால்; சற்றுமுன் பாக நீர் உறங்கும்பொழுது, இவ்வுலகம் துயரப்படுகிற தாகவும் அதை நீர் தீர்க்கப் போகிறதாகவும் கூறினீர்.

சி. கண்மணி! இதற்கு நீ கலக்கப்படலாமா? அப்படி நேரிடுவதாயின் அதற்கு நீ சந்தோஷமல்லவோ பட வேண்டும்.

ய. ஆம் பிராணநாதா, என்னை மாத்திரம் விட்டுப் பிரியாதி ருப்பதாயின், நான் அதற்கு மிகவும் சந்தோஷப்பட வேண்டியதே.

சி. உன்னை விட்டுப்பிரிவதாகக் கூறினேனா என்ன—உறக்கத் தில்?

ய. இல்லை—ஆயினும், கண் விழிக்கு முன், காலம் வந்து விட்டது, காலம்வந்துவிட்டது! என்று உறக்கக்கூவினீர். ஒரு வேளை என்னைப் பிரியக் காலமோ என்று நினைக்க, என்னையு மடங்காதபடி கண்ணீர் வந்தது.
[கண்ணீர் விடுகிறாள்.]

சி. [முத்தமிட்டு அக்கண்ணீரை அகற்றி] கண்ணே! இப்பொழுது நீ துக்கப்படுகிறாயே, இம்மாதிரியாக நீ துக்கப்படாதி ருக்கும்படியான மார்க்கத்தையே நான் நாடுகிறேன்.

ய. ஆனல் பிராணநாதா, எனக்கு மிகவும் சந்தோஷம்; அதைக் கண்டறிந்தவுடன் எனக்கு அதைத் தெரிவிக்க வேண்டும்.

சி. கண்மணி, அதைக் கண்டறிந்தவுடன் உனக்குத் தெரிவிக்காமலிருப்பேனே? கட்டாயமாய்த் தெரிவிக்கிறேன்; ஆகவே சந்தோஷமாயிரு.

ய. பிராணநாதா, அப்படியே—இன்று பாண்டிய நாட்டினின்றும் வந்திருக்கும் பாவையரின் பரத நாட்டியத்தைப் பார்ப்போமா, அல்லது சௌராஷ்டரத்திலிருந்து வந்திருப்பவர்களுடைய சங்கீதத்தைக் கேட்போமா?

சி. இரண்டும் செய்வோம். [புன் சிரிப்புடன்]
வரவழை அவர்களை.

ய. [கையை இருமுறை கொட்டுகிருள்.]

சித்திரை வருகிருள்.

சித்தி. அம்மணி. [நமஸ்கரிக்கிருள்.]

ய. நேற்று புதிதாய்வந்த நடன மாதர்களையும் பாடகர்களையும் அழைத்துவா விரைவில். சேடிகளை வரவழை, பனி நீர் கொண்டு வரச்சொல், பிராணநாதர் கண்களைத் துடைக்க.

[சித்திரை போகிருள்; சேடிகள் பனிநீர் முதலியன கொண்டு வருகின்றனர். பனி நீரால் யசோதரை சித்தார்த்தர் கண்களைத் துடைக்கிருள். சேடிகள் விசிறுகின்றனர்.]

சித்திரை நாட்டியப் பெண்களுடனும் பாடகர்களுடனும் வருகிருள். அவர்களெல்லாம் சித்தார்த்தரையும் யசோதரையையும் வணங்குகிருர்கள்.

ய. பிராணநாதா, முதலில் ஆடச் சொல்லவா, அல்லது பாடச் சொல்லவா?

சி. உன் இஷ்டப்படி.

ய. ஆனால் முதலில் பாட்டாகட்டும்.

[சிலர் யாழ் வாசித்துப் பாடுகின்றனர்; பாட்டு முடிந்தவுடன்]

பிராணநாதா, சங்கீதம் எப்படி இருக்கிறது?—என்ன நான் கேட்டுக்கொண் டிருக்கிறேன், நீர் வேறென்னவோ யோசித்துக்கொண்டிருக்கிறாற்போ லிருக்கிறதே? சங்கீதம் நன்றாக இல்லையா என்ன?

சி. அப்படி யொன்றுமில்லை, கண்மணி.

ய. ஆயின் வேறென்ன யோசித்துக்கொண்டிருந்தீர்?

சி. இந்த சுகம்கூட நிலைபெற்ற சுகமாக இல்லையே, கேட்கும் பொழுது மிகவும் சுகத்தைத் தருகிறது உண்மையே, ஆயினும் முடிந்தவுடன் முடிந்ததே என்னும் வருத்தம் உண்டாகிறதல்லவா?—ஆகவே இவ்வுலகில் அழிவிலாச் சுகம் எதுதான் என்று யோசித்தேன்.

ய. அதெல்லாம் அப்புறம் யோசிப்போம்.—சங்கீதத்தை நிறுத்தியது உமக்கு வருத்தத்தை யுண்டு பண்ணினால் இன்னும் பாடச் சொல்லுகிறேன், நீராகப் பார்த்து போதும் என்று சொல்லுகிற வரையில்.

சி. வேண்டாம், போதும் சங்கீதம்—அந்த மகரயாழைப் பலகணி ஓரமாக வைக்கச் சொல். முன்பொருகால் அப்படி வைத்த பொழுது அதினின்றும் சங்கீத ஒலி உண்டாச்சுது காற்றின் வேகத்தினால்.

ய. சித்திரை, பிராணநாதர் கூறியபடி செய்.

[சித்திரை அங்ஙனமே செய்கிறாள்.]

நாட்டியமாகட்டும்.

[நடனமாதர் நடித்து அபிநயம் பிடிக்கின்றனர்.]

சி. [திடீரென்று அவர்களை நிறுத்தி] பொறுங்கள்! சந்தடி செய்யாதீர்கள்!

[எல்லோரும் அசைவற்று நிற்கின்றனர்.]

ய. பிராணநாதா! என்ன?—என்ன பிராணநாதா?

சி. கண்ணே!—அந்த சங்கீதத்தைக் கேள்.

ய. எந்த சங்கீதத்தை?

சி. அதோ! அப்பலகணியில் வைக்கப்பட்ட யாழினின்றும் உற்பவிக்கும் சங்கீதத்தை.

ய. என் செவிக்கு ஒன்றும் புலப்படவில்லையே.

சி. பொறு! என்ன ஆச்சரியம்!—எனக்கு நன்றாய்க் கேட்கிறதே! [உள்ளே மெல்லிய சங்கீதம்.

"மாநிலம் எங்கும் வருந்தி அலைந்துறும்
மாருதம் ஒதுவ கேளும்—கண
மேனும் சுகமாய் இருக்க விரும்பினும்
இல்லை ஒழிவொரு நாளும்!—உங்கள்
வாழ்வாவதும் வளி மாதிரி
தாழாது சஞ்சல மேவுமே"
"எங்கிருந் துற்றனம், யாதுகுறித்துயாம்
இங்கு வந்தேம் எனத்தேரேம்—உயிர்
எங்கிருந் துற்றது? இனி எங்குச் செல்லுமோ
என்பதை நீவிரும் தேரீர்—எனின்
இருவோருமே, இருபேய்களில்
திரிவோர்களே தெரியீர் சுகம்."
"மாயை மகனே! நீ ஒப்பொழிவின்றி
மகிழும் சுகங்களும் வம்பே—உங்கள்
நேயமாம் காதல் நிலைத்திடுமே யெனில்
நிச்சயமாம் இவை இன்பே—ஐயோ!
சுழல் சூறையே என மாறியே
விழையாவுமே, ஒழி வாகுமே."]

அந்தோ! நான்கு திக்கிலும் பரந்தெழும் காற்றின் சப்தம் போலும் நானிலத்தில் நரமனிதன் வாழ்வு! அதைப் போலவே எங்கிருந்து வருகிறதோ, எங்கே போகிறதோ? சந்தோஷமாய் ஆரம்பித்தாலும் துக்கமாய் முடிகிறதே!

ய. பிராணநாதா! இன்னும் அதையே பற்றி யோசித்துக் கொண் டிருக்கிறீரே—யோசிப்பதனால்தான் உமக்கு துயரம் உண்டாகிறது; யோசியா திருந்து விடுமே?

சி. அதுதான் என்னால் முடியவில்லை.

ய. ஆனால் உமது மனக்கிலேசத்தை நீக்க மார்க்க மொன்று மில்லையா?

சி. அதைத் தான் கண்டுபிடிக்கப் போகிறேன்.—அது என் அருகிலிருப்பதுபோ லிருக்கிறது ஒரு க்ஷணம், மறு க்ஷணம் கண்ணுக்கெட்டாத் தூரம் போய்விட்டதுபோ லிருக்கிறது. அதிருக்கட்டும், இம்மாதர்கெளல்லாம் ஆடிப் பாடிக் களைத்திருக்கின்றனர். அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்பிவிடு—தக்கபடி அவர்களுக்கு எல்லாம் பரிசளிக்கச் சொல்.

ய. அப்படியே—உங்களுக் கெல்லாம் நாளைத்தினம் நீங் கள் விரும்பிய பரிசளிக்கிறேன். இப்பொழுது விடை பெற்றுக்கொள்ளுங்கள் எல்லோரும்.

சி. சித்திரை தவிர.

ய. அப்படியே.

[சித்திரைத் தவிர மற்றவர்கள் வணங்கிப் போகின்றனர்.]

சித்தி. சித்தம்.

சி. அம்மா, இப்படிவந்து எங்கள் எதிரில் உட்கார்—நேற் றைத்தினம் "பறக்கும்பரி" என்று ஒரு கதை சொல்வ தாகச்சொன்னையே அதைச் சொல் இப்பொழுது.

ய. ஆம்—எப்படியாவது உமது மனம் சந்தோஷத்தின் மீது திரும்பினால் போதும்.

சித்தி. இளவரசே, இவ்வுலகில் சீனு தேசமென்று ஒரு தேச முண்டு—

சி. எங்கே இருக்கிற தத்தேசம்?

சித்தி. நமது நாட்டிற்கு வடக்கே இமயமலைக் கப்பால்.

சி. அதற்கப்புறம் கூட நாடுகளிருக்கின்றனவா, நீ பார்த்திருக்கிறாயா?

சித்தி. நான் பார்த்ததில்லை—ஆயினும் அதற்கப்புறம் அநேக தேசங்க ளிருக்கிறதாகச் சொல்லுகின்றனர்.

சி. மற்றப் பக்கங்களில்?

சித்தி. மற்றப் பக்கங்களிலும் அநேக தேசங்களிருக்கின்றன—கிழக்கிலும், மேற்கிலும், தெற்கிலும்கூட. கிழக்கே ஒரு தேசத்தில் சூரியன் சமுத்திரத்தில் உதிக்கிறானாம், மேற்கே ஒரு தேசத்தில் சூரியன் சமுத்திரத்தில் மறைகிறானாம். அதிருக்கட்டும் கதையை தயவுசெய்து கேளும். அத்தேசத்தில் ஒரு அரசிளங்குமர னிருந்தானாம்; அவனிடம். [பாடுகிறாள்.]

பதினாறும் ஆண்டில் பரதேசி ஒருவன் அணுகி
பாவையின் படமொன்று பரிந்தவன் கையிற்கொடுக்க
படத்தி னெழிலைக்கண்டு பதைத்த மனத்தினனாய்
மணந்திடக் கருதி மாதெத்தேய மெனவினவ
சிங்கள மன்னவன் செல்வப்புதல்வி யெனக்கூற
ஆங்கவன் செல்ல அறியாத வகையினனாய்
அல்லலிற்பட்டு அழுதிடும் காலையில்
ஆகாயத்திற் செல்லும் மாகாயப் புரவியொன்றை
அன்னவன் கொடுத்திட அதைக் கொண்டரசன்
அத்தேயம் அணுகி—

சி. பொறு! அப்படி ஆகாயத்திற் பறக்கும்படியான புரவிகளு மிருக்கின்றனவா?

சித்தி. கதைதானே இளவரசே!—அன்றியும் இல்லையென்று எப்படி கூறலாம்? நாமறியாத விஷயங்கள் இந் நாநிலத்தில் எத்தனையோ இருக்கலாம்.

சி. அந்தோ! அப்படிப்பட்ட புரவி எனக்கொன்றிருக்குமாயின்!

ய. இருக்குமாயின்?—என்ன செய்வீர் பிராணநாதா?

சி. அங்கெல்லாம் போய்ப் பார்ப்பேன் உடனே.

ய. பார்த்து, என்னைப் பார்க்கிலும் அழகிகள் யாராவது இருந்தால் மணம் செய்து கொள்வீர்களோ?

சி. கண்மணி, நீ என்னை இக் கேள்வி கேட்கலாமா? அப்படிச்செய்வேன் என்று உனக்கு அணுவளவேனும் சந்தேக மிருக்கிறதா? என்னை ஏறெடுத்துப் பார்த்துச் சொல்.

ய. [தலை குனிந்து] இல்லை பிராணநாதா! என்னை மன்னியும்.—நான் விளையாட்டாக அப்படிக் கேட்டேன்—ஆயினும் பிராணநாதா, அங்கெல்லாம் எதற்காகப் போக விரும்புகிறீர்?

சி. கண்ணே, அங்கிருப்பவர் களெல்லாம் நம்மைப்போல் தானிருக்கிறார்களோ, வேறு மாதிரியாக இருக்கிறார்களோ, என்றறிய விரும்புகிறேன். அன்றியும் அவர்களும் நம்மைப்போல் சுகதுக்கங்கள் அனுபவிக்கிறார்களோஎன அறிந்து, அவர்கள் யாருக்காவது நாம்செய்ய வேண்டிய உதவி ஏதாவதிருக்குமாயின் அதைச் செய்ய விரும்புகிறேன். அவர்களெல்லாம் ஏதோ துயரப்படுவது போலும், அத்துயரத்தை நீக்க என்னை அழைப்பது போலும், தோற்றுகிற தெனக்கு.

ய. பிராணநாதா, அப்படி நீர் என்னைவிட்டுப் பிரிந்தால், நான் துயரப்படுவேன் என்பதை நீர் கவனிக்கவேண்டாமா? அன்றியும் அது உமக்குத் துயரத்தை தராதா?

சி. தரும்; அதற்காகத்தான் உலகத்திலுள்ள எல்லோருடைய துயரத்தையும் நீக்கும் மார்க்கம் ஒன்றில்லையா

என்றே என் மனம் தேடுகிறது—அம்மார்க்கத்தைக் கண்டு பிடிப்பேனாயின், உனக்கும் சுகம், எனக்கும் சுகம், உலகமனைத்திற்கும் சுகமாகு மல்லவா?

ய. ஆம், பிராணநாதா.

சி. ஆகவே அதைக் கண்டுபிடிக்க நான் யத்தனிப்பதில் நீ எனக்கு உதவி புரியவேண்டாமா?

ய. ஆம் பிராணநாதா, உண்மையே—என்னாற் செய்யக் கூடியதைச் சொல்லும் செய்கிறேன்.

சி. ஆயின் கண்மணி, இவ்வரண்மனையை விட்டு வெளியே போய் ஆங்காங்குள்ள காட்சிகளைக் கண்டுவர எனக்கு விடையளிப்பாய்—முதலில்.

ய. அப்படியே பிராணநாதா, தங்கள் சொல்லுக்குக் குறுக் குண்டா? அன்றியும் நீர் கூறிய மொழிகளைக்கேட்டு என்னையுமறியாதபடி எனக்கொரு மகிழ்ச்சி யுண்டா கிறது; ஆகவே இது முடிவில் நம்முடைய நன்மைக் காகவே ஆகும் என நம்புகிறேன்.

சி. கண்மணி, மிகவும் உசிதமான வார்த்தை உரைத்தாய். கண்மணி, சித்திரைக்கு உன் முத்து மாலைகளில் ஒன் றைப் பரிசாகக் கொடு.

[யசோதரை அங்ஙனமே செய் கிறாள்.]

சித்திரை, சந்தகனை அழைத்து நாளைப் பகல் எனது ரதத்தைச் சித்தமாய் வைத்திருக்கும்படிச் சொல், நான் வெளியேபோய் முதலில் நமது பட்டணத்தைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்று விரும்புவதாக என் தந்தை யிடம் சொல்லி யனுப்பு.

சித்தி. ஆக்கினைப்படி இளவரசே. [வணங்கிப் போகிறாள்.]

சி. [பரிவாரங்களை நோக்கி] நீங்கள் எல்லாம் விடைபெற்றுக் கொள்ளுங்கள். [பரிவாரங்கள் வணங்கிப் போகின்றனர்.] கண்மணி, உன்புத்திக்கு மெச்சி மகிழ்ந்தேன். நீயும் விடை பெற்றுக்கொள், சற்று தனித்திருக்க விரும்புகிறேன்—

ய. அப்படியே பிராணநாதா. [சற்று தூரம்போய்த்திரும்பிவந்து] பிராணநாதா, நான் கரு உயிர்க்குங் காலம் சமீபித்திருக்கிறதென்று நினைக்கிறேன்.

சி. சந்தோஷம்.

[யசோதரை சித்தார்த்தரை முத்தமிட்டுப் போகிருள். சித்தார்த்தர் மஞ்சத்தின்மீது சாய்கிருர் கவலையுடன்.]

அந்த யாழிலிருந்து உற்பத்தியான சங்கீதத்தின் அர்த்தமென்ன? ஏதோ நான் மறந்திருந்ததை நினைப்பூட்டுவது போ லிருந்ததே!—

காட்சி முடிகிறது.

## இரண்டாவது காட்சி.

இடம்—வீதியை யடுத்த வசந்த மண்டபத்தில் ஓர் உப்பரிகை.

(உள்ளே சப்தம் "ஜெயவிஜயீபவ! இளவரசே! ஜெயவிஜயீபவ!")

ஒரு புறமாக சித்தார்த்தரும் சந்தகனும் வருகிருர்கள்.

சி. சந்தகா, கண்டகத்தை அவிழ்த்துவிடு; கொஞ்சம் இளைப்பாறட்டும். நான் இங்கே இம் மண்டபத்தில் உட்காருகிறேன்.—நீயும் வந்து உட்கார்ந்து இளைப்பாறு பிறகு.

ச. ஆக்கினை. [போகிருன்.]

சி. [மண்டபத்தில் உட்கார்ந்து] அந்தோ! இதுதானோ உலகம்? எங்கு பார்த்தபோதிலும் ஆகாயத்திலும் பூமியிலும் ஜலத்திலும், பட்சிகளும் மிருகங்களும் மச்சங்களும் ஒன்றை யொன்று கொன்று தின்று உயிர் வாழ்கின்றனவே! மனிதர்களிலும் இப்படித்தானோ? ஈதென்ன வாழ்வு? ஒவ்வொரு மனிதனும் தான் வாழவேண்டி தன்னையும் கஷ்டத்திற்குள்ளாக்குகிறான், மற்றவர்களுக்கும் கஷ்டம் கொடுக்கிறான். ஈதென்ன சுகம்? மற்றொரு பிராணியை துக்கப்படச் செய்து நாம் சுகப்படுவதா? எந்த சுகத்தை நோக்கினும் துக்கத்திலேயே ஆரம்பிக்கிறது, துக்கத்திலேயே முடிகிறதே! இது இதுவரையில் எனக்குத் தெரியாதிருந்ததே! இதைக் கண்டறியவோ நான் கவலைப்பட்டேன்? இதைக் கற்றறிந்து நான் பெற்ற பலன் என்ன?—

சந்தகன் மறுபடி வருகிறான்.

ச. இளவரசே, இதுதான் சரியான இடம். இவ்விடம் நாம் தங்கி யிருப்போமாயின் இன்றைத்தினம் வசந்தோற்சவம் கொண்டாடும் ஜனங்களுடைய வேடிக்கை யெல்லாம் பார்க்கலாம்.

[ஜனங்கள் முன்னும் பின்னுமாய்ப் போய்க்கொண்டிருக்கின்றனர்.]

சி. சந்தகா, அதென்ன வேஷம்?

ச. எதோ?—அதுவா? மதன் ரதி வேஷம், கரும்பு வில்லிருக்கிறது பாருங்கள் கையில்.

ஒருவன் கஷ்டப்பட்டுப் பாடிக்கொண்டு வருகிறான்.

சி. சந்தகா, அவன் தொண்டை கம்ம லடைந்திருக்கிறாற் போலிருக்கிறதே, அப்படி யிருந்தும் அவன் ஏன் பாடுகிறான்?

ச. அவன் பாடாவிட்டால் அவனுக்கு ஜீவனம் கிடைக்காது. அதுதான் அவன் தொழில்—இல்லாவிட்டால் ஜனங்கள் அவனுக்குக் காசு கொடுக்கமாட்டார்கள்.

சி. அந்தோ! சங்கீதங்கூட கூலியின் பொருட்டுதானா?

ஓர் வயோதிகன் தள்ளாடிக்கொண்டு தடி ஒன்றை யூன்றி வருகிறான்.

வ. ஐயா! தொண்ணூறு வயசு கெழவேன் ஐயா, கால் நடக்கமுடியலே ஐயா, காதடைச்சுகினு போவுது! பசியாயிருக்குது! ஒரு காசு பிச்செ கொடுங்கையா!

[ஜனங்களில் சிலர் பிட்சை போடுகின்றனர்.]

சி. சந்தகா, அது என்ன வேஷம்?

ச. இளவரசே, அது வேஷமல்ல,—அவன் சுபாவமே அப்படி.

சி. என்ன! இவன் இப்படியா பிறந்தான்? உடம்பெல்லாம் ஏதோ வற்றிப்போனதுபோ லிருக்கிறதே; கண்ணும் நன்றாய்த் தெரியவில்லைபோலும்; தோலெல்லாம் வரி படர்ந்து திரைந்து தொங்கி நிற்கிறது, கால் தள்ளாடி நடக்கின்றான், ஒரு கொம்பை யூன்றி—

ச. இளவரசே, இளவயதில் இவனும் நம்மைப்போல் இருந்தவன் தான். இப்பொழுது வயதாகி விட்டது, அவன் சொன்னதைக் கேட்டீரே; தொண்ணூறு வயதாயதென்று—அதனால் இப்படி யிருக்கிறான்.

சி. தொண்ணூறு வயதானால் எல்லோருக்கும் இப்படியா ஆகும்?

ச. ஆம் இளவரசே.

சி. நீயும் இப்படியா ஆவாய்? நானும் இப்படியா ஆவேன்?

ச. ஆம் இளவரசே, அதற்குச் சந்தேகமில்லை.

சி. என் தந்தையும் இப்படித்தான் ஆவாரோ?

ச. கொஞ்சம் வருஷம் போனால் அவரும் இப்படி ஆகவேண்டியதுதான். காலன் ஒருவனையும் மன்னிக்கமாட்டான், அவனுக்கு அரசனென்றும் அற்பவேலை ஆள் என்றும் பேதமில்லை.

சி. ஆண் மக்களுக்கு மாத்திரம் இப்படியா? ஸ்திரீகளுக்கும் இப்படித்தானோ?

ச. ஆண் பெண் எல்லாம் ஒன்றுதான்; முதிர் வயதடைந்தால் எல்லோரும் இப்படித்தானாக வேண்டும்.

சி. யசோதரை! யசோதரை!—இப்படியாவதற்கா நாம் இப்பூமியில் வாழ்ந்து வருகிறோம்? இவ்வுடலைப் போஷித்து வருகிறோம்? [யோசிக்கிறார்.]
சந்தகா, உன்னிடம் என்ன பணம் கொண்டு வந்திருக்கிறாயோ அதை அவனிடம் கொடுத்தனுப்பிவிடு.

[சந்தகன் அப்படியே செய்கிறான். பிறகு சில வேஷதாரிகள், பணியாரம் விற்பவர்கள், பழம் புஷ்பம் முதலியன விற்பவர்கள் கூவிக் கொண்டே போகின்றனர்; அவர்கள் மத்தியில் ஒரு பிணியாளி வருகிறான்.]

பி. தெய்வமே! தெய்வமே! இன்றைக்கு எனக்கு குளிர் ஜுரம் வரவேண்டுமா! எல்லோரும் இன்று சந்தோஷமாயிருக்கிறார்களே! நான் மாத்திரம் துக்கமனுபவிக்க வேண்டுமா?—அப்பாடா! இனி என்னால் ஒரு அடி எடுத்து வைக்க முடியாது.—ஐயா! ஐயா! உங்களுக்குப் புண்ணியமாகப் போகிறது என்னை என் வீட்டிற்குக் கொண்டுபோய் விடுங்கள்!

[சித்தார்த்தரின் எதிரில் வந்து விழுந்து விடுகிறான்.]

சி. சந்தகா! இது யார் இது? இவன் ஏன் விழுந்து விட்டான்? யார் என்ன தீங்கிழைத்தார்கள் இவனுக்கு? இவன் உடலெல்லாம் ஏன் இவ்வாறு நடுங்குகிறது? ஏன் இப்படி பெருமூச்சு வருகிறது? ஏன் தழதழத்துப் பேசுகிறான்? யாராவது இவனை ஹிம்சித்தார்களா என்ன?

ச. இல்லை—இவன் பிணியாளி—ரோகம் பிடித்தவன், அவ்வியாதியினால் பலம் குன்றி, தேகவலி யற்றுப்போய் இந்த ஸ்திதிக்கு வந்திருக்கிறான். அதற்குமேல் குளிர் ஜ்வரம் வந்திருக்கிறாற்போ லிருக்கிறது.—அதனால் நடக்கச் சக்தியற்று விழுந்து கிடக்கிறான்.

சி. இவனுக்கு ஏன் இவ் வியாதி என்பது வந்தது?

ச. சுகாதார நீதிகளுக்கு விரோதமாக இவன் ஏதாவது நடந்திருக்கலாம், அதனால் இவனை இவ்வியாதி பிடித்திருக்கக்கூடும்.

சி. ஐயோ பாபம்! இவனை அவன் வீட்டிற்குக் கொண்டு போய் விடுவோம் வா— [அவனை எழுப்பப் போகிறார்.]

ச. இளவரசே! பொறும்! பொறும்! தீண்டாதீர் இவனை! அது தொத்து வியாதி. நாம் இவனைத்தீண்டுவோமாயின் அவ்வியாதி நம்மையும் பிடித்தாலும் பிடிக்கும்!

சி. நாம் ஒன்றும் தவறு செய்யவில்லையே?

ச. இல்லை—ஆயினும் அவ்வியாதியின் குணம் அப்படிப் பட்டது.

சி. என்ன? யாரை வேண்டுமென்றாலும் பிடிக்குமா என்ன அது?

ச. ஆம், அது இன்னாரைப் பிடிக்கும் இன்னாரைப் பிடிக்காது என்று சொல்வதற்கில்லை.

சி. ஆகவே எந்த க்ஷணம் நம்மைப் பிடிக்குமோ என்கிற பயத்துடன் நாம் தினம் காலம் கழிக்கவேண்டுமோ?

ச. உண்மையை உரைக்குமிடத்து அப்படித்தான் அரசே.

சி. இதென்ன வாழ்வு! இதென்ன வாழ்வு! எந்த க்ஷணம் எந்த வியாதி பிடிக்குமோ என்கிற பயத்துடனு மனிதர்கள் வாழ்ந்து வருகிறார்கள் இம்மண்ணுலகில்!—

[பிணியாளியை ஒரு வழிப்போக்கன் ஒரு கோலைக் கையில் கொடுத்துப் பிடிக்கச் செய்து அழைத்துக் கொண்டு போகிறான்.]

பி. [போகும் பொழுது] அப்பா! அப்பா! இன்னம் எத்தனை நாள் இம்மாதிரி நான் கஷ்டப்படவேண்டுமோ? ஈஸ்வரா! ஈஸ்வரா! [போகிறான்.]

சி. சந்தகா, இவன் இன்னும் எத்தனை நாள் இக்கஷ்டத்தை யனுபவிக்கவேண்டும்?

ச. இது தீராத வியாதி—சாகும் வரையில் இக்கஷ்டத்தை அனுபவிக்கவேண்டு மிவன்.

சி. எது வரையில்?

ச. சாகும் வரையில்.

சி. சாகும் வரையில்—என்றால்?

ச. இவன் பிராணன் போகும் வரையில்?

சி. சந்தகா, நீ சொல்வது எனக்கு அர்த்தமாக வில்லை, சற்றே விளங்கச் சொல்.

ச. இளவரசே, நமதுடலில் பிராணன் என்று ஒன்று இருக்கிறது—அது போனால் நாம் பிணமாய்ப் போவோம்—அதோ கொண்டு வருகிறார்களே அந்த பிணத்தைப் போல்.

[சிலர் பாடைமீது ஒரு பிணத்தைச் சுமந்து வருகின்றனர்; "ராம்நாம் சார்த்தகே! ராம்நாம் சார்த்தகே" என்று கூவிக்கொண்டு போகின்றனர்.]

சி. சந்தகா! இது என்ன இது? இது என்ன இது?

ச. நான் சொன்னேனே, பிராணன் போனால் பிணமாவோம் என்று—அப்படி பிராணன்போன பிணம் இது.

சி. ஆனால் நமக்கெல்லாம் கூட இக் கதி வாய்க்குமோ ?

ச. இளவரசே, அதற்குக் கொஞ்சம்கூட சந்தேகமில்லை. அரசன் முதல் அற்ப தோட்டி வரையில் எல்லோருக்கும் ஒரு நாள் இக்கதி சம்பவிக்கும்—பிறந்த தெல்லாம் ஒரு நாள் இறக்கவேண்டியதுதான்; செத்தவனை இப்பொழு திவர்கள் சுமந்துகொண்டு போகிறார்களே, இம்மாதிரியே இவர்களையும் ஒரு நாள் மற்றவர்கள் சுமந்துகொண்டு போவார்கள். "செத்தாரைச் சாவார் சுமந்து" என்று ஒரு பெரியவர் எழுதியிருக்கிறார்.

சி. அந்தோ !—இது தானே முடிவு ?—எங்கே கொண்டு போகிறார்கள் ?

ச. அதோ நதியோரம் சிதையடுக்கி யிருக்கிறதே அங்கே. —அங்கே கொண்டுபோய் அதன் மீதுவைத்துத் தீ மூட் டி தகனம் செய்துவிடுவார்கள் அவ் வுடலை.

சி. பிறகு ?

ச. பிறகு—எல்லாம் சாம்பலாகும்—அவ்வளவுதான்.

சி. அந்தோ ! இவ் வாழ்வெல்லாம் எரியினிலிடும் வாழ்வு தானே ? எரியினிலிடும் வாழ்வுதானே ? இதற்காகவா வாழ்ந்து வருகிறோம் ? இதற்காகவா இவ்வுடலைப் போ ஷித்து வருகிறோம் ? இந்த முடிவிற்காகவா ?—சந்தகா, ஒரு சந்தேகம்—இறந்தவன் பிராணன் போகிற தென் றாயே, எங்கே போகிறது—அது ?

ச. வேறு ஜென்மம் எடுக்கப் போகிறது—அப் பிராணன் செய்த கர்மாவுக் கேற்றபடி.

சி. பிறப்ப தெல்லாம் இறக்கவேண்டு மென்றாயே, வேறு ஜென்ம மெடுத்தால் மறுபடியும் இறக்கவேண்டி வருமே?

ச. ஆம், கட்டாயமாய் இறக்கவேண்டும்.

சி. பிறகு மறுபடியும பிறக்கவேண்டும்! இப்படி பிறந்திறந்து பிறந்திறந்து கொண்டே யிருந்தால் எப்பொழுதான் இந்தச் சக்கரம் முடிகிறது ?

ச. இளவரசே, அதற்கு உத்தரம் சொல்ல எனக்குத் தெரியாது.

சி. அந்தோ! இறப்பதற்காகவா மனிதர்கள் மண்ணில் பிறக்கிறார்கள் ? மறுபடியும் பிறப்பதற்காகவா இறக்கிறார்கள் ?—நானும் இப்பொழுது பிறந்திருப்பது இறப்பதற்காகவேயோ ?

ச. இளவரசே, நீர் கேட்டகேள்விக்குப் பதிலுரைக்க எனக்குச் சக்தி யில்லை. அதோ ஒரு ஸ்ரமணர் வருகிறார், அவருக்கு ஒரு வேளை தெரியும்.—

தூரத்தில் துவராடை யணிந்து ஓர் ஸ்ரமணர் மெல்ல வருகிறார்.

சி. அவர் யார் ?

ச. அவர் ஒரு சன்யாசி.

சி. சன்யாசி என்றால் அர்த்தம் என்ன ?

ச. எல்லாவற்றையும் துறந்தவர், உலகப் பற்றையெல்லாம் விட்டவர்.

சி. அவரை இங்கழை—முகத்தில் என்ன தேஜஸ் விளங்குகிறது ! அவருடன் நான் பேசவேண்டும்.

ச. [அவரிடம் சென்று] பெரியோரே, எமதிளவரசர் உம்முடன் பேச விரும்புகிறார்.

[சித்தார்த்தரிடம் அவரை அழைத்துச் செல்கிறான்.]

சி. பெரியோரே, இப்படி வீற்றிருக்கவேண்டும்—தாங்கள் யாரோ தெரிய விரும்புகிறேன்.

ஸ். நான் ஒரு ஸ்ரமணன்.

சி. தாங்கள் இவ்வாறு துவராடை உடுத்திருப்பானேன் ?

ஸ் இவ் வுலகப் பற்றினை யெல்லாம் விட்டொழிந்ததற் கறி குறியாக இவ் வாடையை உடுத்திருக்கிறேன்.

சி. இவ்வுலகப் பற்றினை ஏன் விட்டீர் என்று நான் கேட்க லாமோ ?

ஸ். சுகமாய்க் கேட்கலாம். நீரிற் குமிழி யாக்கை யென்றும், நிலையிலா இந்நிலவுலகச் சுகங்களெல்லாமென்றும், நாம் பிறக்கும்பொழுதே நம்முடன் பிணி மூப்பு சாக்காடு பிறக் கின்றனவென்றும் அறிந்து, துக்காக்கிராந்தனுனேன். அத் துக்கத்தினின்றும் நீங்கி, என்று மழியாததும், ஆத் யந்த மில்லாததும், நட்புப் பகைமை யற்றதும், ஏகாந்த மானதும், ஆநந்த மயமாகவுள்ளதுமான, ஓர் நிலையை அடைதற்குப் பிரயத்னப் படுகிறேன். ஆகவே ஊர் புறத்தே தங்கி, ஐம்புலன்களையுமடக்கி, சமாதியிலிருந்து கொண்டு, உயிரைக் காப்பதற்கு வேண்டிய அளவே உணவை இரந்துண்டு வாழும் பிட்சுக்களின் நிலையை விழைந்தேன்.

சி. பெரியோரே, இந்நிலை எனக்கு என்று கிட்டுமோ ?

ஸ். சித்தார்த்தா ! காலம் சமீபித்து விட்டது ! கலங்காதே! நான் வருகிறேன். [போகிறார்.]

சி. ஆம்—காலம் சமீபித்துவிட்டது !—ஆயினும் கலக்கம் நீங்கவில்லையே!—

ஒரு தூதன் வேகமாய் வருகிறான்.

தூ. எங்கே இளவரசர்? எங்கே இளவரசர் ?

சி. ஏனப்பா, என்ன விசேஷம் ?

தூ. ஜெயவிஜயீபவ ! சர்வமங்கள முண்டாகுக ! இளவரசே! தங்களுக்குப் புத்திரன் பிறந்தான் ! இந்த சந்தோஷ

சமாசாரத்தைத் தெரிவித்து, தங்களை உடனே அரண் மனைக்கு அழைத்து வரச்சொன்னார் மஹாராஜா !

சி. அந்தோ ! பந்தங்களையெல்லாம் நிவர்த்திக்க முயலும் சமயத்தில், பந்தத்தின்மேல் பந்தம் உண்டாகிறதே'— பிறந்தவன் புத்திரனோ அல்லது என் புத்தியாகிய திங் களை விழுங்கவந்த ராகுவோ ?—சந்தகா ! தேரிற் குதி ரையைப் பூட்டு. போகவேண்டிய இடத்திற்குப் போ வோம்.

காட்சி முடிகிறது.



## மூன்றாம் காட்சி.

இடம்—யசோதரையின் படுக்கை யறை.

படுக்கை யறையின் படுதாவுக்கு முன்பாக
அநேக ஸ்திரீகள் சங்கீதக் கருவிகள் முதலியன பக்கத்தில்
வைத்துக்கொண்டு கொஞ்சம் அலங்கோலமாய்த்
துயிலுகின்றனர்.

படுக்கை யறையினுள் யசோதரை குழந்தையுடன்

தூங்கிக்கொண்டிருக்கிறாள்.

பக்கலில் சித்தார்த்தர் உறங்குகிறார்.

ய. [உறக்கத்தில்] பிராணநாதா ! பிராணநாதா !

[திடுக்கிட்டெழுந்து]

சீ ! என்ன கனவு ! ஜகதீசனே ! இது இனி நேரிடப் போகிற தீங்கைக் குறிக்காதிருக்குமாக ! உறங்குகிறார் பிராணநாதர், ஆயினும் அவரை மெல்ல எழுப்புவோம்— என் மனத்தில் பெரும் பயம் குடிகொண்டிருக்கிறது.

[சித்தார்த்தர் வலக் கரத்தை மிரு துவாக மூன்று முறை முத்த மிடுகிறாள்.]

என்ன ? இன்னும் எழுந்திருக்கவில்லை— [உரக்க] பிராணநாதா! எழுந்திரும் ! எழுந்திரும் ! உமது தேன் மொழிகளால் என்னைத் தேற்றும் சிறிது !

சி. [கண் விழித்து] என் இன்னுயிரே ! என்ன உடம்பு உனக்கு ?—ஏன் கண்ணீர் விடுகிறாய் ? [துடைக்கிறார்.]

ய. பிராணநாதா! நான் பயங்கரமான ஒரு கனவு கண்டேன்.

சி. கண்மணி, உன் மனதைக் கொஞ்சம் தேற்றிக்கொண்டு அது இன்னதென்று சொல்.

ய. பிராணநாதா, சற்று முன்பாக நான் சந்தோஷமாய் உறங்கினேன். அவ்வுறக்கத்தில் மூன்று பயங்கரமான காட்சிகளைக் கண்டேன்—அதை இப்பொழுது நினைத் தாலும் என்னுளம் பதைபதைக்கிறது—

சி. என்ன அவைகள் சொல்.

ய. முதலில், நமது அரண்மனையில் கட்டப்பட்டிருந்த வெள்ளிமயமான ரிஷப மொன்று கட்டுத் தறிகளை யெல்லாம் அறுத்துக்கொண்டு, வெளியே போக முயன்றதாகவும், ஒருவராலும் அதை அடக்க முடியாமற் போனதாகவும், அப்பொழுது ஆகாயவாணி "இதை நீங்கள் தடுக்காவிட்டால் இப்பட்டணத்தின் மஹிமையெல்லாம் இதனுடன் போம்" என்று கூற, நான் கதறியழுது, அதன் கழுத்தை எனது கரத்தாற் சேர்த்துக் கட்டித் தடுக்க முயன்றும், அது என்னைப் பட்சமுடன் பார்த்தபோதிலும், என்னையும் திமிறிக்கொண்டு, வாயில்களை யெல்லாம் தாண்டிக் குதித்து வெளியே போனதாகக் கண்டேன்; பிறகு அரண்மனை கோபுரத்தில் கட்டப்பட்டிருக்கும் இந்திர த்வஜமானது பெருங் காற்றொன்றால் சின்னா பின்னமாய்க் கிழிக்கப்பட்டதாகவும், அதற்குப் பதிலாக அறமொழிகள் வரைந்துள்ள ஜோதிமயமான சக்கரம் ஒன்று அவ்விடத்தில் கண்டோர் மனத்தை யெல்லாம் களிப்புறச் செய்துகொண்டு சுழன்றுகொண்டிருந்ததாக

வும், அதன்மீது தேவர்களெல்லாம் பூமாரி பொழிந்ததாக வும், கண்டேன்.

சி. கண்மணி, இது பயத்தை உண்டு பண்ணவேண்டிய காட்சி அன்றே—

ய. ஆம் உண்மையே. ஆயினும், கடைசியிற் கண்ட கனவே எனக்குப் பெரும் பயத்தைக் கொடுத்தது; அது என்ன வெனில்—"காலம் நெருங்கிவிட்டது! காலம் நெருங்கி விட்டது!" என்று ஆகாயத்தில் யாரோ கூவியதுபோல் கேட்டு, கனவில் நான் கண் விழித்துப் பார்த்தது போல வும், அப்பொழுது என் பக்கலில் உம்மைத் தேடிக் காணாது, உமதுமேலாடையை மாத்திரம் கண்டதாகவும், கனவில் நான் திடுக்கிட்டு எழுந்து பார்க்க, என் ஆப ரணங்களெல்லாம் கழன்று விழுந்துவிட்டதாகவும், நான் சூடிய மலர் வாடியதாகவும், வெளியில் அந்த ரிஷபத்தின் சப்தத்திற்கு மேலாகவும் ஜோதி சக்கரத்தின் சப்தத் திற்கு மேலாகவும், அசரீரி "காலம் நெருங்கிவிட்டது! காலம் நெருங்கிவிட்டது" என்று உரத்துக் கூவியதாக வும் கனவு கண்டேன்—அதனால் கண் விழித்தேன்! நாதா! இக் கடைசி கனவுதான் என் உடலை இன்னும் நடுங்குறச் செய்கிறது!

சி. கண்ணே, உன் மனத்தைத் தேற்றிக்கொள்—இதற் கெல்லாம் பயப்படலாமா?

ய. பிராணநாதா! இக் கனவுகளின் அர்த்த மென்ன?— என் முடிவு காலத்தை குறிக்கின்றனவோ? அப் படி யிருக்குமாயின் அதை நான் சகிப்பேன்—அதை விட்டு, என் மரணத்திற்குமேல் துக்ககரமான, உம் முடைய பிரிவைக் குறிப்பதாயின், அதை நான் எவ்வாறு சகிப்பேன்! [கண்ணீர் விடுகிருள்.]

சி. கண்ணே, என்றும் குன்ரு என் காதலினுல் உன் மனம் தேறுதல் அடையக் கூடுமாயின், உன் மனதை தேற்றிக்

கொள். ஏனெனில், ஒருகால் உனது கனவுகள் உண்மையைக் குறிப்பதாயினும், தேவர்களே தத்தம் நிலையினின்றும் தவறியபோதிலும், உலகமே தன் இயற்கை மாறியபோதிலும், வேலை கரையிழந்தாலும், வேத நெறி பிறழ்ந்தாலும், எனக்கும் உனக்கும் என்ன நேர்ந்த போதிலும், உன்மீது எனக்குள்ள காதல் அணுவளவேனும் குன்ருதென உறுதியாய் நம்பு. மண்ணுலகிலுள்ள பிராணிகளின் துக்கத்தை மாற்றிட வழியொன்று நான் பல திங்கள் களாகத் தேடி வருகிறேன் என்பதை நீ அறிந்திருக்கிருய். ஆகவே காலம் வரும்பொழுது நடக்கவேண்டியது நடந்துதான் தீரும். ஆதலால் என்ன நேர்ந்தபோதிலும், மற்றவர்களுக்காக எதை நான் தேடுகிறேனே, அதை முக்கியமாக உன்பொருட்டு தேடுகிறேன் என்பதை உறுதியாய் நம்பி, உன் சித்தத்தைத் தேற்றிக்கொள். ஒருகால் உனக்கு துக்கம் நேர்ந்த போதிலும், நம்முடைய துயரத்திஞல் உலகம் உய்யும் வழியை அறியக்கூடும் என்று திருப்தி செய்துக்கொள். கண்ணே! என்னைக்கட்டி முத்தமிடு, என்னுடைய என்றுமழியாக் காதலுடன், வேறொருவரும் அறிந்திடாத இதையும் நீ அறிவாயாக—உலகில் உயிர் படைத்த பிராணிகளின்மீ தெல்லாம் எனக்கு அன்பிருப்பதனுல் தான்—நான் உன்மீது அதிக ஆர்வமுள்ளவனுயிருக்கிறேன் என்பதை.

ய. பிராணநாதா, உமது வார்த்தைகளால் என்மனம் திர்ப்தியடைகிறது—இவ்வாறு நீங்கள் என்னுடன் பேசும் பொழுது, கேவலம் மனுஷ்யன் பேசுவதுபோலில்லை—ஏதோ தெய்வம் பேசுவதுபோலவே இருக்கிறது.

சி. சரி, கண்மணி, இனி உறங்கு—ஒன்றும் அஞ்சாதே!

[யசோதரை உறங்குகிருள். சித்தார்த்தர் எழுந்து படுக்கையறையின் படுதாவைத் தள்ளி வெளியே பார்க்கிருர்.]

இல்லறத்து இன்பங்களெல்லாம் என்ன துக்ககரமானவை! இவ் வற்பசுகங்களைக் கருதியோ மாந்தர் இல்லறத்தில் கட்டுப்பட்டிருக்கின்றனர். இன்றைத்தினம் என்ன அழகாய்ச் சந்திரன் பிரகாசிக்கிறான்! ஆகாயமும் நிஷ்களங்கமா யிருக்கிறது! இன்று விசாக பூர்ணிமை யல்லவா? ஆம் ஆம்! [ஆகாயத்தை உற்றுப் பார்க்கிறார்.]

ய. [உறக்கத்தில்] "காலம் வந்துவிட்டது! காலம் வந்துவிட்டது!"

சி. ஓஹோ! ஜோதிஷர்கள் குறித்த தினம் இன்றுதானல்லவா? ஆம் சந்தேக மில்லை! இன்று நான் உலகமனைத்தும் ஒரு குடைக்கீழ் ஆளும் சக்ரவர்த்தியாகும் மார்க்கத்தைத்தேடவேண்டும், அல்லது அணி முடி துறந்து அனைத்தையும் விட்டு, பிச்சை யெடுத் துண்ணும் பிட்சுவாகி, ஊரூராய் ஒண்டியாய் உழன்று உலகமனைத்தும் உஜ்ஜீவிக்கும் மார்க்கத்தைத் தேடவேண்டும்.—அதோ! அன்றைத்தினம் அம்மகர யாழினின்றும் காற்றின் வேகத்தினால் கேட்ட சங்கீதம் மறுபடியும் என் செவியிற் படுகிறதே!—நான் புறப்படத்தான் வேண்டும்!—காலம் வந்துவிட்டது! கண்மணி! உன்னைவிட்டுப் பிரிவது, உன்னையும் இவ் வுலகனைத்தையும் துக்கமென்னும் வலையினின்றும் விடுவிக்கும் பொருட்டே! இதற்காகத்தான் நான் பிறந்தேன்! அதனை இப்பொழுது நன்கு யறிகிறேன். உலகத்திலுள்ள பிராணிகளுக்கு அழியாச் சுகத்தை யளிக்கும்பொருட்டு எனது அரசுரிமை, யௌவனம், மனைவி, மகன், எல்லாவற்றையும் துறக்கிறேன்! துயரத்தினின்றும் கரையேறும் துறையை நான் காணுது போகிறேனோ பார்ப்போம்! அதைக் கண்டு பிடிப்பேனாயின் உலகிலுள்ள பிராணிகளெல்லாம் உஜ்ஜீவிக்கும் அல்லவா? ஆகாயவாணியே பூமிதேவியே! தாரகைகளே! தாராபதியே! நீங்களேசாட்சி! இவ்வுலகைக் காப்பாற்றும்பொருட்டு, என் இன்ப உலகைத்துற

க்கின்றேன். பெண்ணே யசோதரை! கண்ணே ராகுலா! அண்ணா சுத்தோதனராஜனே! எண்ணிறந்த நகர வாசிகளே! நான் உங்களை விட்டுப் பிரிவதனால் உங்களுக்கெல்லாம் கொஞ்சம் துக்கம் விளைப்பேன் உண்மையே, ஆயினும் அங்ஙனம் செய்வது முடிவில் உங்களனைவர்க்கும் துக்கமே இல்லாத வழியைத் தேடிக் கண்டு பிடித்து உபதேசிக்கும் பொருட்டே. ஆகவே மன்னியுங்கள் என்னை—

[யசோதரையின் பாதத்தருகில் நின்று தலை குனிகிறார்; பிறகு மும்முறை படுக்கையை வலம் வருகிறார்.]

இனி இங்கு உறங்கேன்!—

[மூன்றுமுறை போக யத்தனிக்கிறார்; மூன்றுமுறை திரும்பி வருகிறார்.]

ஒரு முறை—கடைசி முறை—உதவாது!—பிறகு விழிப்பாள்—விழித்தாளாயின் அவள் துயரம் அதிகரிக்கும்—இனி இவர்களைப் பார்ப்பதும் கஷ்டத்திற் கிடமாகும்!—கடைசி முறை!—

[சரேலென்று முகத்தைத் திருப்பி, வஸ்திரத்தால் மூடிக்கொண்டு]

தொல்லுலகில் பிறப்புப் பிணி மூப்பு சாக்காடெனும் துன்பங்களை யெல்லாம் அறவே நீக்குதற்குரிய அறநெறியை அறிந்தாலன்றி மீளேன்! இது சத்யம்!

[சரேலென்று வெளியே போகிறார்.]

காட்சி முடிகிறது.



# நான்காம் காட்சி.

இடம்:—அனோமா நதிக்கரையில் பார்க்கவர் ஆஸ்ரமம்.

சித்தார்த்தனும் சந்தகனும் வருகிறார்கள்.

சி. [குதிரையை விட்டிழிந்து] என்ன ஆச்சர்யம்! கொஞ்சமேனும் சலிப்பின்றி மூன்று யோசனை தூரம் வந்த கண்டகம் தானாகத் திடீரென்று இங்கு நின்றுவிட்டது! இது எந்த இடம்?—யாரோ தபசியின் தவப்பள்ளி போலும்! பிட்சா பாத்திரங்கள் எல்லாம் வைக்கப்பட்டிருக்கின்றன! இதுவே நமக்கு நன்னிமித்தமாகும். கண்டகமே! நான் தேடிப் போகும்பொருள் மனிதர்களுக்கு மாத்திரம் அல்ல, உலகில் உயிர் படைத்த எல்லாப் பிராணிகளுக்கும் நன்மை பயக்குமாதலால், அம் முயற்சியில் நீயும் உதவினாய் என்று சந்தோஷப்படு.

[அதற்கு முத்தமிடுகிறார்.]

சந்தகா, இதுதான் கடைசி முறை கண்டகத்திற்கும் உனக்கும் சிரமம் கொடுத்தது. இனி உங்களுக்கு சிரமம் கொடேன். நீங்களிருவரும் எனக்குச் செய்த மஹோபகாரத்தை மறவேன். அடைய வேண்டுமென்று நெடுநாளாக நினைந்துகொண்டிருந்த இடத்தை இன்று அடைந்தேன். இனி நீ விடை பெற்றுக்கொண்டு, கண்டகத்தையும் அழைத்துக்கொண்டு நகரம் போய்ச் சேர்! இதை என் ஞாபகார்த்தமாக வைத்துக்கொள்.

[தனது முத்துமாலையைக் கழற்றி அவனுக்குக் கொடுக்கிறார்.]

ச. [அவர் பாதத்தில் விழுந்து புலம்பி] இளவரசே! இளவரசே! உம்மை விட்டு நான் எவ்வாறு பிரிவேன்? என் மனம் துணியவில்லையே. நீர் எங்கு சென்றபோதிலும் நானும் உம்முடன் வருகிறேனே!

சி. அப்பா, சந்தகா, நீ என்னுடன் இப்பொழுது வருவது நியாயமன்று. நான் தேடும் பொருளைத் தனித்திருந்தே

தேடவேண்டும். ஆகவே என் சொற்படி கேள். இவ்வாடை யாபரணங்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு போய் என் தந்தையிடம் கொடு.

[ஒவ்வொன்றாகக் கழற்றிக் கொடுக்கிறார்.]

ச. அந்தோ! இளவரசே! சுத்தோதன மஹாராஜாவின் புத்திரர், அரசர்க் கரசனாகி, உலகங்களுக் கெல்லாம் சக்ரவர்த்தியாகி ஆள்வாரென்று அந்த ஜோஸ்யன் சொன்ன மொழி பொய்த்துப் போவதா? உலகத்தின் அரசாட்சியை விட்டு பிட்சுவைப்போல் பிட்சா பாத்திரத்துடன் நீர் போவதா? தேவேந்திர போகத்தை அனுபவித்த நீர், தெருத் தெருவாய் அநாதையாய் அலைந்து திரிவதா? [அழுகிறான்.]

சி. அப்பா! இதற்காகவே நான் பிறந்திருக்கிறேன். நான் விரும்பும்படியான ஆட்சி இவ்வுலக அரசாட்சிக் கெல்லாம் மேலானதே! எனக்கும் உலகத்திலுள்ள எல்லோர்க்கும் நான் விரும்பும்படியான சுகம், அத்தேவேந்திர போகத்திற்கும் மேம்பட்டதே! ஆதலால் நீ இதற்காக வருத்தப்படாதே— சந்தோஷமல்லவோ படவேண்டும். இனி போய்வா.

ச. அந்தோ! அந்தோ! இளவரசே! நான் எப்படிப் பட்டணம் திரும்பிப் போவேன்? உமது தந்தையெதிரிற் போவேனாயின், அவர் என் மைந்தன் எங்கே என்று கேட்டால், இப்படியானார் என்று வாய் திறந்து என்னால் எப்படிக் கூறமுடியும்? இளவரசே! உமது தந்தை இதனைக் கேட்பாராயின் தன் ஆவிதரிப்பாரோ? அவர் என்ன துயரப்படுவார்! உமது மனைவி என்ன துக்கப்படுவார்கள்! உமது உற்றார் உறவினர் எல்லாம் என்ன வருத்தப்படுவார்கள்! உமது ப்ரஜைகளெல்லாம் என்ன கலங்குவார்கள்! இதையாவது தாங்கள் கருதலாகாதா? எல்லாப்பிராணிகளுக்கும் இன்பத்தைத் தேடப்போகி

றேன் என்கிறீரே, இதுதானே? எல்லோரையும் துக்க சாகரத்தில் மூழ்த்துகிறீரே! இதுதானே அவர்களுக்கு நீர் உதவி புரிவது?

சி. அப்பா, உலகில் முதலில் கஷ்டப்பட்டுத்தான் எந்த சுகத்தையும் பெறவேண்டும். நானும் அவர்களும் துயரமனுபவித்துத்தான் பிறகு சுகத்தை யடையவேண்டும் போலும். அன்றியும், நான் எனக்காகவும் உலகத்தோர் எல்லோருக்காகவும் நாடுவது, கேவலம் அழியும் சுகங்கள் அல்ல, என்றுமழியாத ஆநந்தமாகும்! அதை அவர்களுக்கெல்லாம் தேடிக்கொடுக்கும் பொருட்டே, அவர்களுக்கெல்லாம் இப்பொழுது இப்படி வருத்தத்தையுண்டுபண்ணவேண்டி வருகிறது.

ச. இளவரசே! இப்படிப் பேசும் உமது வார்த்தைக்குக் குறுக்காக நான் என்ன சொல்லப்போகிறேன்? தங்கள் கட்டளைப்படியே ஆகட்டும்.

சி. அதுதான் சரி; அப்பா, இன்று நீ எனக்கு உதவி புரிந்தது உலகனைத்திற்கும் உதவி புரிந்ததாகும். நீ என் மீது வைத்த பிரியத்திற்காக, உன்மீது எப்பொழுதும் பிரியமுள்ளவனாயிருப்பேன் என்று உறுதியாய் நம்பு இந்த ஆடை ஆபரணங்களையெல்லாம் கட்டி, கண்டகத்தின்மீது வைத்து அரசரிடம் கொண்டுபோய், நான் அன்புடன் கொடுத்ததாகக் கொடு. நான் மேற்கொண்ட யத்னத்திற்கு இவைகள் உபயோகப்படுவனவல்ல என்று நான் சொன்னதாகச் சொல்; அன்றியும்—

[தன் வாளால் தன் நீண்ட கேசத்தை அறுத்துக் கொடுத்து உடைவாளையும் கொடுத்து.]

இதையும் எடுத்துச்செல்; இவைகளையெல்லாம் அரசரிடம் கொடுத்து, நான் நாடிப் போவதைக் கண்டுபிடித்துத் திரும்பும் வரையில், என்னை மறந்திருக்கும்படி வேண்டிக்கொண்டதாகச் சொல். இல்லறத்தின் வழியாக

துக்கமெனும் சாகரத்தைக் கடத்தற்குரிய தெப்பம், எனக்குக் கிடைக்காமையினாலேயே, நான் துறவு பூணுகிறேன் என்று தெரிவி. மேலும், நான் உலகப்பற்றை யெல்லாம் வெறுத்தது, உலக மனைத்தும் உஜ்ஜீவிக்கும் பொருட்டாதலால், உலக மனைத்தையும் என் அன்பினால் வென்ற பிறகே, திரும்பி வருவேன் என்றும்சொல்; இனி விடைபெற்றுக்கொள்.

[அவர் பாதத்தில் விழுந்து புலம்பி] இளவரசே! இளவரசே! நான் விடை பெற்றுக்கொள்ளுகிறேன்.—இந்த திருவடிகளை நான் மறுபடியும் எப்பொழுது காண்பேனோ?

காலத்தில் காண்பாய்.

என்றோ? என்றோ? [புலம்புகிறான்.]

வருந்தாதே, போய்வா.

[அவன் தலைமீது கையைவைக்கிறார்; சந்தகன் எழுந்திருக்கிறான், சித்தார்த்தர் தலையைத் திருப்பிக் கொள்ளுகிறார்; சந்தகன் மூட்டையை எடுத்துக்கொண்டு அழுத வண்ணம் போகிறான்.]

கடைசி தளை நீங்கியது!

**காட்சி முடிகிறது.**



# நான்காம் அங்கம்

## முதற் காட்சி.

இடம்—ராஜக்கிருஹத்திற் கருகிலுள்ள ஓர் வனம்.

சித்தார்த்தர் துவராடை யுடுத்து வருகிறார்.

சி. அந்தோ! நான் நாடிய பொருள் என்று என் கையிற் கூடுமோ? எவரை அடுத்த போதிலும் நான் தேடும் பொருளைப் பெறுவதற்கு வழியினைக் கூறுகிறார்களில் லையே! தவ சிரேஷ்டர்களை யடுத்து தாவாக்னி மத்தியி லிருந்து கடுந்தவ மியற்றிப் பார்த்தேன்; அராள ராமனை யடுத்து அஷ்டாங்கயோகங்களையும் பயின்றுபார்த்தேன்; உருத்திரகரை யடுத்து அஷ்டமா சித்திகளிலும் வல்லவ னானேன்; ஆத்மதத்வ ஆராய்ச்சி அநேக முனிவர்களு டன் செய்து பார்த்தேன்; ஆயினும் நான் அடைய விரும்புவதை அடைய வில்லையே! இவைகளால் எனக் கென்ன பிரயோஜனம்? பிறவிப் பிணியைத் தீர்க்க மருந் தொன்றும் கண்டே னில்லையே!—அந்தோ! நான் இந்த நர ஜன்ம மெடுத்தென்ன பிரயோஜனம்? கோடானு கோடிப் பிராணிகளெல்லாம் முன்போலவே துக்க சாகரத்திலேயே மூழ்கிக் கிடக்கின்றனவே. அவை களில் ஒன்றையேனும் கரையேற்ற அசக்தனா யிருக் கின்றேனே!—நான் உயிரோ டிருப்பது இந்த வயிற் றை வளர்ப்பதற்கா? அதைவிட உயிரை மாய்த்துக் கொள்ளலாமே?—இப்படி இன்னும் சில காலம் கழிப் பேனாயின் மெலிந்த என் உடலிலிருந்து ஆவி தானகப் பிரிந்துபோம் என்பதற் கையமில்லை. பிறகு உலகத்திற்கு நன்மை புரியவேண்டும் என்று நான் மேற்கொண்ட உறுதி மொழி என்னாகும்?—அந்தோ கடும்பசி என்னை வாட்டுகிறது; இன்று பிட்சை யெடுக்கவும் மறந்தேன்!

—இனி நடக்கவும் என் கால்களுக்குச் சக்தியில்லை—அந்தோ! உலகமே! உலகமே!

[பலஹீனத்தால் மூர்ச்சையாகி விழுகிறார்.]

ஒரு இடையன் ஆட்டு மந்தையை ஓட்டிக்கொண்டு வருகிறான்.

இ. ரொம்ப நேரமா போச்சி; சீக்கரம் போவாப்போனா ராஜா தண்டிச்சூடுவாரு—யார் அது இங்கே படுத்துகினு கெடக்கரது?—யாரோ பாவம்! செத்துப்பூட்டாப்போலெ இருக்குது! இல்லெ இல்லெ! உசிறு இருக்குது, மூச்சு வருதே! யாரோ பெரியவரு பசியிலெ களைச்சி உழுந்து வுட்டாப்போலெ இருக்குது.—கொஞ்சம் பாலுகொடுக்கலாமா?—எப்படி கொடுக்கறது? அவரெ நானு தொடக்கூடாதே—இத்தான் சரி—

[ஒரு வெள்ளாட்டை அருகிற் பிடித்துபோய் அதன் மடியினின்றும் நான்கு பிரை அவர் இதழ்களுக் கிடையில் விழும்படி கறக்கின்றான்.]

சி. [அதை யுண்டு கண் விழித்து] அப்பா,—உனக்கு வந்தனம் அளிக்கின்றேன்—உன் கலத்திலுள்ள பாலில் எனக்குக் கொஞ்சம் கொடு.

இ. சாமி! நானு எடையன், சூத்தர ஜாதி, என் கலத்தெத் தாங்க தீண்டமாட்டீங்களே—இதிலெ யிருக்கர பாலே எப்படி—

சி. தம்பி, பசி என்பது எல்லா மனிதர்களுக்கும் பொதுவாயிருக்கிறது, பிணி மூப்பும் எல்லாருக்கும் பொதுவாயிருக்கிறது, பிறப்பு இறப்பும் எல்லோர்க்கும் பொதுவாயிருக்கிறது, அங்ஙனமிருக்க, தாழ்ந்த ஜாதி உயர்ந்த ஜாதி என்ன இதில்? அப்பா, நானறிந்த வரையில் மற்ற உயிர்களின்மீது தயை உடையவனே உயர்ந்த ஜாதி,

அத்தயை இல்லாதவனே தாழ்ந்த ஜாதி. ஆகவே என் ஸ்திதியைக் கண்டு பிரதி பலனைக் கருதாது எனக்குதவிய நீயே உயர் குடியிற் பிறந்தவன். ஆகவே உனது கலத்தில் நான் உண்ணலாம், கொடு.

இ. சாமி, உங்க இஷ்டம்.

[பாலைத் தன் கலத்தில் கொடுக்க அதை வாங்கி சித்தார்த்தர் குடித் திளைப்பாறுகிறார்.]

சி. அப்பா, எனக்குதவிய நன்மை உனக்குக் கிடைக்குமாக சீக்கிரத்தில்!

இ. சாமி, எனக்கு உத்தரவு கொடுங்க—நானு சீக்கிரம் போவணும்.

சி. இன்னும் பொழுது போக வில்லையே இதற்குள்ளாக உன் மந்தையை ஓட்டிக்கொண்டு எங்கே போகிறாய்?

இ. சாமி, இந்த ஆடுங்களெ மேய்க்க இட்டு வரலே இங்கே, எங்க ராஜா ஒரு யாகம் பண்ணராரு, அதுக்காக எராணூறு ஆடு கொண்டுவரச் சொன்னாரு பொலி கொடுக்க, அதுக்கோசரம் ஓட்டிகினு போரேன்.

சி. அந்தோ! இத்தனைப் பிராணிகளும் இன்று கொல்லப் படவேண்டுமோ? அதைத்தடுக்க முடியாதா என்னால்?—பார்க்கிறேன்! பயனில்லாத ஆத்ம தத்வ விசாரணை செய்வதைவிட இந்த ஆடுகளைக் காப்பது மேலான காரியமாகும் என்றெண்ணுகிறேன்—அப்பா, உங்கள் ராஜா யார்?

இ. பிம்பசார ராஜா.

சி. அப்படியா? நானும் உன்னோடு வரவா?

இ. உங்க இஷ்டம்.

சி. ஆனால் நானும் வருகிறேன். [புறப்படுகிறார்.]
அப்பா, அந்த பெட்டையாடு ஏன் முன்னும் பின்னுமாக ஓடிக்கொண்டிருக்கிறது?

இ. அதுக்கு சாமி, ரெண்டு குட்டி, ஒரு குட்டி நல்ல குட்டி முன்னாலே தள்ளிகினு ஓடுது, இன்னொரு குட்டி அதோ பாருங்க பொரவாலெ, நொண்டி குட்டி, பின்னாலெ தங்குது, அத்தொட்டு அந்த தாயாடு இதுக்கும் அதுக்கும் ஓடிகினு இருக்குதுங்க.

சி. அப்படியா ?—இவ்வனத்திலுள்ள துறவிகளுடன் உலகத்திலுள்ள பிராணிகளின் துக்கங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதைவிட, ஏதேனும் ஒரு பிராணியின் துயரத்தைத் தீர்ப்பதே மேலாகும்!—தாயே! நீ துயரப் படாதே—உன் நொண்டிக்குட்டியை நான் சுமந்து உன்னுடன் வருகிறேன். [அங்ஙனமே செய்கிறார்.]

இ. சாமி! கொஞ்சம் சீக்கிரம் நடங்க—நேரமா போச்சி! ராஜா ரொம்ப கோவிச்சிகிவாரு.

சி. இவ்வாடுகளை யெல்லாம் சீக்கிரம் கொல்வதற்கில்லையே யென்று?—பார்ப்போம்.—இதோ வந்தே னப்பா.

[விரைந்து அவனுடன் செல்கிறார்]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி.

இடம்—ராஜக்கிருஹத்தில் யாகசாலை.

அந்தணர்கள் தீ வளர்த்தி யாகம் செய்துகொண்டிருக்கின்றனர்.

ஒரு வெள்ளாடு யூபஸ்தம்பத்திற் கட்டப்பட்டிருக்கிறது.

பிம்பசாரன் ஒரு புறமாக மந்திரிகள் புடைசூழ உட்கார்ந்து கொண்டிருக்கிறான்.

பிம். மந்திரி இன்னும் என்ன தாமதம்? பலிகொடுக்க வேண்டிய மற்ற ஆடுகளெல்லாம் வந்து இன்னும் சேரவில்லையா?

ம. அரசே, அந்த இடையன் மற்ற ஆடுகளை யெல்லாம் இன்னும் ஏன் ஓட்டிக்கொண்டு வரவில்லையென்று விசா

ரித்து வரும்படி ஒரு தூதனை அனுப்பினேன்— இதோ அவன் வருகிறான்.

தூதன் வருகிறான்.

எங்கேயடா ? ஆடுகள் வந்தனவா ?

தூ. [பணிந்து] அதோ ஓட்டிக்கொண்டு வருகிறான்.

பிம். இழுத்துவா அந்த இடையனை இப்படி! இவ்வளவு காலதாமசம் செய்ததற்காக அவனை தண்டிக்கவேண்டும்.

தூ. இதோ வந்துவிட்டான் அரசே.

இடையர் ஒருபுறமாக வந்து பணிந்து நிற்கிறான்.

பிம். அடே! கோனான்! ஏன் இவ்வளவு காலஹரணம் செய்தாய்? முன்பே வரவேண்டுமென்று கட்டளையா யிருந்ததல்லவா உனக்கு?

இ. [பணிந்து] மஹாராஜா! மன்னிக்கணும்! ஒரு குட்டியாடு நொண்டியா போச்சுதுங்க—அத்தெ யாரோ ஒரு பெரியவரு பாத்து தன் தோள்மேலே தூக்கி போட்டுகினு வந்தாரு, அவரோடே பேசிகினு வந்ததுலே நாழியா போச்சுதுங்க, மன்னிக்கணும்.

பிம். இந்த முறை மன்னித்தேன், இனிமேலே இம்மாதிரி செய்யாதே போ.

இ. புத்தி! [போகிறான்]

பிம் அந்தணரே, இனி யாகத்தை நடத்துங்கள்.

அ. சித்தம், மஹாராஜா.

[யூபஸ்தம்பத்தில் கட்டப்பட்டிருக்கும் வெள்ளாட்டின் கழுத்தில் கத்தியை வைத்து.]

தேவர்களே! இதுவரையிலும் எமது அரசனால் உமக்களிக்கப்பட்ட அவிஸ் எல்லாவற்றைப் பார்க்கிலும் இது

சிறந்ததானது. இவ்வாட்டின் ரக்தம் வெளியில் பீரிட்டுச் செல்வதைக் கண்டும், இதன் தசை யாகாக்னியில் வாட்டப்படும் பொழுதுண்டாம் நறு மணத்தை ஆக்கிரஹணம் பண்ணியும், மனம் மகிழ்வீர்களாக! எங்கள் மன்னன் இதுவரையிற் செய்த பாபமெல்லாம் இவ் வாட்டின் தலையில் சுமத்தப் படுவதாக! யாகாக்னியானது அப்பாபத்தையும் இதன் தலையையும், இரண்டையும் ஏக காலத்தில் சுட்டெரித்திடுமாக! இதோ நான் இதை வெட்டுகிறேன். [கத்தியை ஓங்குகிறான்.]

சித்தார்த்தர் விரைந்து வருகிறார்.

சி. கொல்லற்க! கொல்லற்க!—அரசனே! இந்த அஜமானது ஆவியோடு பிழைத்துப் போகும்படி அருள் புரிவீராக!

[ஆட்டின் கட்டினை யவிழ்த்து விடுகிறார். அது துள்ளிக்கொண்டு வெளியே ஓடுகிறது.]

அரசனே! அந்தணர்களே! அதைக் கண்டீரா! சற்று முன்பாகக் கலங்கிய கண்களுடன் இருந்த அந்த ஆடு, என்ன சந்தோஷமாய் ஓடுகிற திப்பொழுது! நம்மைப் பிடித் தொருவன் நரபலி கொடுக்க இந்த யூபஸ்தம்பத்திற் கட்டுவானாயின், நாம் என்ன துக்கப்படுவோம்? அந்த அவஸ்தையிலிருந்து அகஸ்மாத்தாய் விடுவிக்கப் பட்டால் என்ன சந்தோஷமடைவோம்? நமக்கிருப்பது போலத்தான் மற்றப் பிராணிகளுக்கு மிருக்கும் என்று நாம் எண்ணவேண்டாமா? அன்றியும் நமது மதக்கோட்பாட்டின்படி மனிதர்களுடைய உயிரே மறுஜன்மங்களில் மற்றப் பிராணிகளாகப் பிறக்கலாம் என்றிருக்கும் பொழுது, அதனுயிருக்கும் நம் முயிருக்கும் என்ன பேதம்? போன ஜன்மத்தில் நமது அன்னையோ, தந்தையோ, ஆப்தமித்திரனோ, ஆருயிர்க் காதலியோ, மடிந்து, இந்த ஜன்மத்தில் அந்த ஆடாய்ப் பிறந்திருக்கக் கூடுமல்லவா?

அது னுண்மையை நாம் அறிவோமாயின் அவர்க ளுயிரை இப்பொழுது போக்க நமக்கு மனம் வருமா? அன்றியும் உயிருள்ள ஒவ்வொரு பிராணியும் எவ்வளவு சிறியதாயினும் கீழ்ப்பட்டதாயினும், தன் உயிரின்மீது அதிகப் பற்றுள்ளதாய், அதை எவ்விதத்திலும் காப்பாற் றமுயல்வதை நாம் கண்டிருக்கிறோ மல்லவா? ஆகவே உலகினில் உயிரினும் சிறந்தது ஒன்று மில்லை யன்றோ? தானம் கொடுப்பது புண்ணியம் என நீங்கள் ஒப்புக் கொள்ளும்பட்சத்தில், பிராணப்பிரதானத்திலும் சிறந்த புண்ணியம் ஒன்றிருக்கிறதோ? இந்த வேள்வியை ஏன் இயற்றுகிறீர்கள்? உங்களிலும் மேலாக மதிக்கப்படும் தேவர்கள் உங்கள்மீது கருணை கூரும்படிக் கல்லவா? அப்படிக் கிருக்க, உங்களிலும் கீழாக நீங்கள் மதிக்கும் பிற வுயிர்க்கு நீங்கள் பாராட்டும் கருணை யென்ன? எங்களுக்குமாத்திரம் நீங்கள் அருள் புரியுங்கள், நாங்கள் மற்றவர்களுக்கு அருள்புரிய மாட்டோம், என்பதுபோ லல்லவோ ஆகிறது! நண்பர்களே! மற்றொரு விதத்தில் யோசித்துப் பார்ப்போம். நீங்கள் செய்த பாபம் நிவா ரண மாகும்பொருட்டு இந்த யாகங்களை இயற்றுவதாகச் சொல்லுகிறீர்கள். ஒருவன் தவறு செய்தால் அதற் குரிய தண்டனையை அவன் அனுபவித்திடல் நியாயம்; அதில் பிரயோஜன முண்டு; அதனால் பரிஹார மடைய லாம். அத்தண்டனையை மற்றொருவனை அனுபவிக்கச் செய்வது என்ன நியாயம்? அதில் இவனுக்கென்ன பிர யோஜனம்? அதனால் இவன் எப்படி பரிஹாரமடைவான்? பாபத்தை நீக்க முயன்று இன்னும் பெரும் பாபம் சம் பாதித்துக் கொள்வதாயன்றோ முடியும்? ஆகவே நண்பர் களே! பிற உயிரினைக் கொல்லாமையினும் சிறந்த தர்மம் இப்பேருலகில் வேறொன்றும் கிடையாது. ஆகவே, இவ் வுலகில் எப்படிப்பட்ட அற்ப உயிரா யிருந்தபோதிலும் அதனையும் தன் னுயிரைப்போல் அத்தனை அருமை யாகப் பாவித்து, அதன்மீது அருள் சுரந்து, அதனைக்

காப்பதுவே தர்மத்திற்கெல்லாம் தலையாய தர்மமாகும். அரசனே, அந்தணர்களே, மற்றுமுள்ளவர்களே, நான் கூறியது உமக்குச் சம்மதமாயின், இனிமேல் யாகங்களில் உயிருள்ளப் பிராணிகளைப் பலி கொடுப்பதை விடுமின். அப்படிக் கின்றி உயிருள்ளப் பிராணிகளைப் பலி கொடுப்பதினால் உங்களுக்கு நலமுண்டாகிறதென இன்னும் நீங்கள் அந்த எண்ண முடையவர்களானால், அந்த ஆட்டிற்கு பதிலாக என்னுடலை கொடுக்கிறேன். இந்த யூபஸ்தம்பத்தில் என்னைக்கட்டி என்னைப் பலி கொடுத்து உங்கள் யாகத்தை பூர்த்தி செய்யுங்கள்.

பிம். சிவ! சிவ! [தன் காதைப் பொத்திக் கொள்கிருன்.] பெரியோரே! நீர் கூறியது எனக்கு மிகவும் சம்மதமாயிருக்கிறது. இதுவரையில் இந்த உண்மையை அறியாதிருந்தேனே!

அந்தணர்கள். மஹானுபாவ! எங்களுக்கும் இதுவரையில் விளங்காதிருந்தது. எங்கள் கண்களை விளக்கினீர். இம் மஹோபகாரத்திற்காகத் தங்களுக்கு நாங்கள் என்ன கைம்மாறு செய்யக்கூடும்?

பிம். செய்யக்கூடிய தேதேனுமிருந்தால் அதைத் தெரிவிக்கக் கோருகிறேன்.

சி. நீங்கள் செய்யக்கூடிய தொன்றுண்டு. அதாவது இனி யாகத்தின் பொருட்டாவது, அல்லது கேவலம் உணவின் பொருட்டாவது, மற்ற உயிர்களை வதைக்காமலிருப்பதே.

அனைவரும். அங்ஙனமே ஆகட்டும்! அங்ஙனமே ஆகட்டும்!

சி. இனி நீங்கள் மேன்மைபெற்று விளங்குவீர்களாக! "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி எல்லாவுயிரும் தொழும்" என்பதை மறவாதீர்! கொல்லாமை எத்தனையோ குணக் கேட்டினை நீக்கும். அஹிம்சையே பரமமான தர்மம்! [போகிருர்.]

அந்தணர்கள். இதுவரையில் நமது கண்கள் மூடியிருந்தனவே! இனி இப்படிப்பட்டயாகங்களை வேண்டியதில்லை நமக்கு!
[வேள்வித்தீயை அவித்து விடு கின்றனர்; யூபஸ்தம்பத்தை வெட்டித் தள்ளுகின்றனர்.]

பிம். மந்திரி, நாளைத்தினம் காலையில், இனி நமது ராஜ்யத்தில் எவரும் வேள்வியின் பொருட்டாவது உணவின்பொருட்டாவது, எந்தப் பிராணியையும் கொல்லக்கூடாதென்று பறை யறைவிப்பாய், அப்படிச் செய்பவர்கள் கடும் தண்டனைக் குட்படுவார்களென்றும் தெரிவியும்.

ம. அப்படியே மஹாராஜா.

பிம். மந்திரி, அந்த மஹானுபாவர் யாரென் றறியாது போனோமே; உடனே நமது தூதர்களிருவரை யனுப்பி அவர் எங்கிருக்கிறார்; யார் அவர், என்பதை யெல்லாம் மெல்ல தெரிந்துவரச் சொல்.

ம. உடனே உத்தரவு செய்கிறேன் இதோ.
[எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## மூன்றும் காட்சி.

இடம்—ராஜக்கிருஹத்தருகிலுள்ள பாண்டரமலை.

சித்தார்த்தர் யோசித்தவண்ணம் ஒரு கற்பாறையின்மீது உட்கார்ந்திருக்கிறார்.

ஒருபுறமாக இரண்டு சாரணர் மெல்ல வந்து நிற்கின்றனர்.

சி. அந்தோ! இன்னும் வழியைக் காணேன்! வழியைக் காணேன்!

மு-சா. இது வொரு பேய் தாண்டா! இல்லாப்போனா இது ஒண்டியா உக்காந்துகினு இருக்குமா பயமில்லாதெ!

இ-சா. இல்லேடா! நம்மெப்போலெ மனுஷன்தாண்டா! அந்த ரிசிங்கல்லாம் இருக்காரங்களே, அந்த மாதிரி இது ஒண்ணுடா.

மூ-சா. அந்த ரிசிங்கல்லாம் ஓமம் பண்ணராங்களே, இது பண்ணலியே?

சி. பசியை அடக்குவோம்.

[தன் சப்பரையிலிருந்த உணவைப் புசிக்க முயலுகிறார்.]

அப்பா!

[வாந்தி எடுக்கப் போகிறார், சமாளித்துக் கொள்ளுகிறார்.]

இதை யடக்க எனக்கு மன உறுதியில்லாவிட்டால் நான் எதை அடக்கப் போகிறேன்!

[மூன்று கவளம் கொள்கிறார்.]

இ-சா. பாத்தையாடா! சோறு திண்ணுமாடா பிசாசாயிருந்தா?

மூ-சா. ஆமாண்டா, நம்ப போயி ராஜாகிட்ட சொல்லுவோம்.

[போகிறார்கள்.]

சி. அந்தோ! இம்மலையருகிலுள்ள ரிஷிகளில் அநேகர் உடம்பைப் பலவிதத்திலும் கஷ்டத்திற்குள்ளாக்கித் தவம் செய்கின்றனர். சிலர் ஆடு மாடுகளைக் கொன்று யாகஞ் செய்கின்றனர். அதனால் அவர்கள் கண்டபலன் ஒன்றையும் காணேமே! அப்படிச் செய்வதினால் தேவர்கள் பிரீதி அடைகிறார்களாம். தேவர்கள் நம்மைவிட உயர் பதவியிலிருந்தும் அவர்களும் நம்மைப்போல் பிறப்பிறப்பிற்குட்பட்டவர்கள் தானே; ஒருயிரைக் கஷ்டப்படுத்தினால் மற்றோருயிர் சந்தோஷப் படுமோ? ஒருயிரைக் கொன்று மற்றோருயிரைச் சந்தோஷப் படுத்துவதோ? அப்படி சந்தோஷப்படுத்தியும் பெறும் நிரந்தமானலாபம் ஒன்றையும் காணேமே! மநுஷ்ய சுகத்தைவிட தெய்வ லோகத்திய சுகம் மேம்பட்டதாயினும், அதுவும் அழியும் சுகம்தானே! இந்த அழியும் சுகத்தைப்பெற இவ்

வளவு கஷ்டப்படுவானேன்? அந்தோ! அழிவிலாச் சுகத்தைப் பெறுவ தெங்ஙனம்? எங்ஙனம்?

பிம்பசாரன் மந்திரி பரிவாரங்களுடன்
வருகிறான்.

பிம். பெரியோரே! நமஸ்காரம்.

சி. அரசே வாருங்கள், உட்காருங்கள்—இங்கு என்னிடம் வந்த காரணம் யாதோ அறிய விரும்புகிறேன்.

பிம். பெரியோரே, தாங்கள் நேற்றைத்தினம் எனது யாக சாலைக்கு வந்து, எங்களை யெல்லாம் இதுவரையில் பிடித்திருந்த அவிவேகத்தை அகற்றி, விவேக முண்டாக்கிச் சென்ற பிறகு, இப்படிப்பட்ட மஹான் யார், அவரது விர்த்தாந்தத்தை அறியாமற் போனோமே யென்னும் குறை, இரவெல்லாம் என்னை வாட்டியது. அக் குறையைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டே எனது சாரணர்களை தாம் யாரென்று விசாரித்து வரும்படியாக அனுப்பினேன்; அவர்கள் தாங்க ளிங்கிருப்பதாயும், ஒன்றும் விவரமாய் அறியக்கூடவில்லை யென்றும், திரும்பிவந்து சொல்லினர். ஆகவே நேரில் வந்து தம்மைக் கண்டு, தங்கள் வர்த்தமானம் அறிந்து போகலாமென்று வந்தேன்.

சி. அரசனே, நான் சாக்கிய குலத்தி லுதித்த சுத்தோதனராஜன் புதல்வன், சித்தார்த்தன் எனும் பெயரோன்.

பிம். அப்படியா!

[பரபரப்புடன் எழுந்து அவரது
இரு கரத்தையும் பற்றி]

சித்தார்த்தரே! தாங்கள் எனது பந்துவாயிற்றே! எனக்கு மூத்தவராயிற்றே! தாங்கள் இங்குவந்து இப்படி இருப்பானேன்?

சி. அப்பா பிம்பசாரா, உலகத்திலுள்ள பிராணிகளை யெல்லாம் பிறப்பு இறப்பென்னும் பந்தத்தினின்றும் விடு

சுகங்களெனத் தீர்மானித்தே, நிரந்தரமான சுகத்தை நாடுகிறேன். தெய்வலோகத்துக் கபாடத்தைத் திறந்து, தேவர்களே தேவபோகத்தை யனுபவிக்க என்னை விரும்பி யழைத்தாலும், அவ்வுண்மையைக் கண்டுபிடிக்கு மளவும், என் பிரயத்னத்தினின்றும் நான் மாறேன்.

பிம். சித்தார்த்தரே, அப்படிப் பிரயத்னம் செய்வதை நான் தடுப்பது நியாயமன்று. ஆயினும், வெயிலி னுலர்ந்து பனியில் நனைந்து, ஊணுறக்கமின்றி இங்கு தனித்திருப்பதைவிட்டு, அரண்மனையிலிருந்து சுகமாய்ப் பிரயத்னம் செய்யலாகாதா?

சி. அப்பா, அச் சுகங்களெல்லாம் இப் பிரயத்னத்திற்கு அனுகுணமானவைகளல்ல, அதன் பொருட்டே அவைகளை யெல்லாம் துறந்தேன்.

பிம். அந்தோ! நான் என்ன சொல்லியும் என் வேண்டுகோளுக்கு இணங்கமாட்டேன் என்கிறீரே! தாங்கள் எந்த ஸ்திதியி லிருந்தபோதிலும் என் பக்கத்தில் இருக்கவேண்டுமென்று என் மனம் பெரிதும் நாடுகிறது, ஆகவே, தாங்களாவது என்னுடன் அரண்மனைக்கு வாரும், அல்லது என்னையாவது தம்முடன் இங்கிருக்க உத்தரவளியும்.

சி. அப்பா, பிம்பசாரா, வேண்டாம், நான் சொல்வதைக் கேள். நான் சீக்கிரம் இவ்விடத்தை விட்டு கயாநகரம் போகப் போகிறேன். அங்குதான் இவ்விருள் நீங்கி, ஒளி உதயமாகும் என்று எனக்குள் தோற்றுகிறது. ஆகவே நீ இங்குதா னிரு நான் நாடியதைக் கண்டுபிடித்தவுடன், உனது பட்டணம் வந்து, உனது மனோபீஷ்டத்தைப் பூர்த்தி செய்கிறேன். இப்பொழுது விடை பெற்றுக்கொள்.

பிம். [அவரை மும்முறை வலம் வந்து] சித்தார்த்தரே! தாங்கள் கூறிய மொழி தவறலாகாது. உங்கள் குலத்து முன்னோ

வித்து, துக்கமெனும் சாகரத்தினின்றும் கரையேற்றி, நிரந்தரமான ஆநந்தத்தை யடையச் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தவனாய், அம் மார்க்கத்தைக் கண்டு பிடிக்கவேண்டி, இவ்வாறு துறவு பூண்டு நிற்கிறேன்.

பிம். அந்தோ! சித்தார்த்தரே! உமது தேகம் ராஜயோகத்தை அனுபவிக்கப் பிறந்ததே யொழிய இவ்வாறு தவத்தினால் க்ரிசமாக்கப்படப் பிறப்பிக்க படவில்லையே! உமது கரங்கள் செங்கோலைப் பிடிப்பதை விட்டு, பிட்சா பாத்திரத்தை எடுக்கவோ? அறுசுவையுடன் அமர்ந்து அரண்மனையில் வாழ்வதைவிட்டு, அயலிடு பிச்சை யுண்டு, அநாதையைப்போல் அரண்யத்தில் தாம் சஞ்சரிக்கலாமா? ஆகவே, சித்தார்த்தரே, தவம் செய்வதை பிராம்மணர்களுக்கும் மற்றவர்களுக்கும் விட்டு, எனதரண்மனைக்கு வாரும்—எனது ராஜ்யத்தில் பாதி உமக்குத் தருகிறேன், என்னுடன் சிம்மாசனத்தில் வீற்றிருந்து இவ்வுலகை யாளும். எனக்குப் பிள்ளை யில்லை, ஒரே குமாரத்தியிருக்கிறாள், அவளை மணந்து, எனதரண்மனையில் சுகமாய் வாழும்; எனக்குப் பிற்காலம் இம் முழு வரசும் உம்முடைய தாகும்.—இதோ என் முடியைப் பெற்றுக்கொள்ளும்—

[தனது கிரீடத்தைக் கொடுக்கப் பார்க்கிறார்.]

சி. [அதைத் தடுத்து] அப்பா, பிம்பசாரா, அரசச் செல்வமும் அரசும், அரண்மனைச் சுகங்களும், அணங்கியலான தாரமும் எனக் கிருந்தன வன்றோ? அவைகளை யெல்லாம் மனமொப்பி விட்டே, நான் விரும்பும் உண்மையை நாடி இத் துறவு பூண்டேன். வெறுத்து வாந்தி செய்ததை உவந்து மறுபடியும் ஒருவன் உட்கொள்ளுவானோ? தானிருந்த வீட்டில் தீப்பற்றி எறிகிறதெனக் கண்டு அதை விட்டு ஓடினவன், மறுபடியும் அதனுள் நுழைய விரும்புவானோ? இவைகளெல்லாம் நிலையிலாச்

ளுகிய பரதன் ஸ்ரீராமருடைய வரவை எதிர் பார்த்தது போல், நான் உமது வரவை எதிர் பார்த்திருப்பேன் என்பதை மறவாதீர்.

[பரிவாரங்களுடன் பணிந்து போகிருன்.]

காட்சி முடிகிறது.

---

## நான்காம் காட்சி.

இடம்—கயாவருகில் நைரஞ்சரைக் கரையோரமாகவுள்ள உருவேலா வனம்.

ஐந்து கிளைகளோடு கூடிய ஓர் அரசமரத்தருகில் சித்தார்த்தர் நிற்கிருர்.

சற்று தூரத்தில் சில கணிகையர் பாடிக்கொண்டு வருகின்றனர்.

க. "சித்தாரைச் சீராக மீட்டு—மிகத்
தூக்கி முறுக்கில் தொலைந்திடும் தந்தி
தொய்யில் ஒலிக்கவே செய்யா—அன்றித்
தோகையே் நல்லிய மாகவே மீட்டின்
சொல்லரும் நாதம் தொனிக்கும்—பின்பு
தோழி! உன் பாட்டும் சுகமாய் இனிக்கும்—
சித்தாரைச் சீராக மீட்டு".

[போகின்றனர்.]

சி. அறிவுடையோர்க்கு அறிவிலிகளும் சில சமயங்களில் அறிவினைப் புகட்டுகின்றனரல்லவா? அவர்கள் பாடிக்கொண்டுபோன பாட்டின் தாத்பர்யம்—சித்தாரின் நரம்புகளை அதிகமாய்த் தளர்த்தி விட்டால், பிரயோஜனமற்றதாய் சங்கீத முண்டாகாது, அதிகமாய் முறுக்கி விட்டால் அறுந்து போகும், சங்கீதமும் அழியும்,

ஆகவே, அதிகமாய் முறுக்காமலும், அதிகமாய்த் தளர்த்தி விடாமலும் வைத்தால்தான், சங்கீதத்திற்கு அநுகுணமாம்—அது எனக்கு என்ன கற்பிக்கிறது? ஞானோதயம் உண்டாகவிரும்பினால், இவ்வுடலைப் பெருந் திண்டியால் பெருக்கவும் செய்யலாகாது, பசியினால் வற்றலா யுலறவும் செய்யலாகாது, என்பதல்லவா? அந்தோ! என் உடலை வருத்தி மிகுந்த பலஹீன ஸ்திதிக்குக் கொண்டுவந்து விட்டேனே; என் கண்களும் சோர்கின்றனவே! உண்மையை அறியும் காலம் நெருங்கிய பொழுது என் உடலின் பலம் குறையலாகாதே! இப்பசி பாதையால் என் உயிர் போமாயின், என்னை நம்பியிருந்த உலகைக் கைவிட்டவனாவேனே!—இங்ஙனம் நேரிடாதிருக்குமாக!

[உட்கார்ந்து கண்ணைமூடித் தியானிக்கிறார்.]

சுஜாதை ராதையுடன் வருகிறாள்.

ரா. அம்மணி! அதோபாரும் நான் சொன்னபடியே அந்த மரதேவதை மரத்தின் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறது அசைவற்று.

சு. ஆம் ஆம் உண்மையே!—முகத்தில் என்ன காந்தி வீசுகிறது! என்ன சாந்தமும் கம்பீரமும் விளங்குகிறது. என் பிரார்த்தனைக்கிரங்கியே இத்தெய்வம் உருவெடுத்து வந்திருக்கிறது போலும். அப்பாலன்னத்தை இப்படி கொடு. குழந்தையைப் பிடித்துக்கொள்.

[சித்தார்த்தர் பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து]

என் பிரார்த்தனைக் கிரங்கி எனக்கு இந்த ஆண் குழந்தையைக் கொடுத்த வனதேவதையே! நான் பிரார்த்தனை செய்துகொண்டபடி இதோ பால் அன்னம் கொண்டு வந்திருக்கிறேன். அதை அங்கீகரித்து அடியாளைக்

கடாட்சித்தருள வேண்டும்.

[தான் கொண்டு வந்த அன்னத்தை அவரது கப்பரையில் இட்டு, அவரது வலக்கரத்தைப் பனிநீரால் கழுவுகிருள்; சித்தார்த்தர் விழித்து, ஒன்றும் பேசாது அதைப் புசிக்கிருர்; அவரது களை தெய்வீகமாக நீங்குகிறது.]

சு. [மறுபடியும் நமஸ்கரித்து] கருணைக் கடவுளே! அடியாள் கொடுத்த நைவேத்தியம் தங்களுடைய மனதிற்கு உவந்ததா யிருக்கிறதா?

சி. அம்மா, நீ எனக்களித்தது என்ன அது?

சு. ஸ்வாமி, எங்கள் மந்தைகளில் நூறு பசுக்களைப்பொறுக்கி யெடுத்து, அவைகளின் பாலைக்கொண்டு, ஐம்பது கன்றுகளை வளர்த்தேன்; அவைகளின் பாலைக்கொண்டு இருபத்தைந்து கன்றுகளை வளர்த்தேன்; அவைகளின் பாலைக்கொண்டு பன்னிரண்டு கன்றுகளை வளர்த்தேன்; அவைகளின் பாலைக்கொண்டு ஆறு கன்றுகளை வளர்த்தேன்; இந்த ஆறு கன்றுகள் பசுக்களாகி ஈன்ற பிறகு, அவைகளின் பாலை யெடுத்து, புதிதாய் உழப்பட்ட நல் வயலில் விளைந்த சம்பா மணிகளை, பின்னமில்லாதனவாய் ஆய்ந்தெடுத்து, சுத்தப்படுத்தி, அப் பாலிலிட்டுச் சமைத்துக்கொண்டு வந்தேன் என் பிரார்த்தனையைச் செலுத்த. ஏனெனில் உங்கள் மரமாகிய இதன் கீழ் தான், கொஞ்ச நாளைக்கு முன், எனக்கு மகன் பிறப்பானுயின் இன்னனம் செய்வேனென்று பிரார்த்தனை செய்து கொண்டேன்; அப்படியே தங்கள் கருணையினல் எனக்கு ஆண் குழந்தை பிறந்தது, அதோ என் தாதி கையில் இருக்கிறது. ஆகவே எனது பிரார்த்தனையைச் செலுத்தினேன்.

சி. அம்மா, அக் குழந்தையை இப்படிக் கொண்டுவா.

சு. இதோ!

[குழந்தையை அவரருகிற் கொண்டு போகிறாள்.]

சி. [அக் குழந்தையின் தலைமீது தன் கையை வைத்து] இக் குழந்தை நெடுநாள் சுகமாய் வாழ்ந்திடுமாக! [சுஜாதைக்கு] அம்மா, உன்னால் உதவப்பட்ட நான் தெய்வமன்று, உன்னைப்போன்ற பிராணியே, உனது சகோதரனே! அரச குமாரனாயிருந்து உலகப் பற்றையெல்லாம் விட்டு, உலகத்தின் கஷ்டத்தைப் போக்கும் உண்மையான நெறியைக் கண்டு பிடிக்கும் பொருட்டு, ஆறு வருடங்களாக அல்லல் உழன்று ஊர் ஊராகத் திரிந்து வருகிறேன். அம்மா, அதை எப்படியும் கண்டு பிடிப்பேன் என்றே நினைக்கிறேன். பசியின் பாதையால் என் உடல் தளர்ந்த பொழுது எனக்கு உத்தமமான உணவைக் கொடுத்து, ஊக்கத்தையும் கொடுத்தாய்; ஆகவே தங்காய்! இந்த உதவியை என்றும் மறவேன். இது உலகனைத்திற்கும் நீ உதவியதாகுமென எண்ணி சந்தோஷப் படுவாயாக! ஆயினும் அம்மா, இவ்வுலக வாழ்க்கையானது உனக்கு சந்தோஷத்தைத் தருகிறதா?

சு. ஐயா பெரியோரே, எனக்கு சந்தோஷத்தையே தருகிறது. காலையில் எழுந்ததும் கடவுளைத் தொழுதபின், என் வீட்டு வேலைகளையெல்லாம் கவனித்து வருகிறேன். என்னைக் கண் போல் பாவிக்கும் எனது கணவரது சுகத்தையே என்றும் நாடுகிறேன், தெய்வ கடாட்சத்தால் எனக்கு மகனும் பிறந்தது; இனிநான் வேண்டுவதென்ன இருக்கிறது? நன்மையினால் நலமுண்டாகும், தீமையினால் தீங்குண்டாகும், என்னும்நன்னெறியைக் கடைப்பிடித்து நான் ஒருவருக்கும் தீங்கு இழைப்பதுமில்லை, நினைப்பதுமில்லை. அன்றியும் இவ்வுலகில் துக்க முண்டென்பதை நன்றாயறிகிறேன். ஆயினும் அதற்காக நான் பயப்

படுவானேன்? இக்குழந்தை தெய்வாதீனத்தால் எனக்கு முன் இறக்குமாயின்—அங்ஙனம் நேரிடாதிருக்குமாக!—நானும் அதனுடன் மடிந்து, என் கணவன் வரவை சுவர்க்கத்தினின்றும் எதிர் பார்த்திருப்பேன்; ஒருகால் என் கணவன் முந்தி மரிப்பாராஞல், அவருடன் உடன் கட்டை யேறுவேன், ஆகவே நான் ஒன்றிற்கும் அஞ்சாது, எல்லாப் பிராணிகளின்மீதும் தயைவைத்து, சந்தோஷமாய் என் வாழ்நாட்களைக் கழித்து வருகிறேன்; தர்மத்தின் வழி நடந்து, பிறருக்கு தர்மம் செய்து, வருவது வந்தே தீரும், அன்றியும் அது நன்மையே பயக்கும் நமக்கு, என்று கடைப் பிடித்து என் வாழ்நாட்களைக் கழிக்கிறேன்.

சி. அணங்கே! நீ அறியாமலே அனைத்தும் அறிந்திருக்கிறாய்! என்னை நமஸ்கரித்த உனக்கு நான் நமஸ்காரம் செய்கிறேன். அம்மா! சுகமாய்ப் போய்வா! சுகமாகவே உன் வாழ் நாட்களை யெல்லாம கழிப்பாயாக! நீ கோரியதைப் பெற்றதுபோலவே, நான் கோரியதைப் பெறுவேனாக! தெய்வமென்று நீ எண்ணிய நான், எனக்கு அவ்வாறு உன் வாயால் ஆசிர்வதிக்கும்படி, வேண்டுகிறேன் உன்னை.

சு. ஐயா பெரியோரே! விரும்புவதைச் சீக்கிரம் பெறுவீராக! நான் விடைபெற்றுக் கொள்ளுகிறேன்.

[பணிந்துவிட்டு, குழந்தையுடனும், ராதையுடனும் போகிறாள்.]

சி. இதுவரையில் இல்லாத பலம் எனக்குண்டாயிருக்கிறது! என் மனமும் தெளிவடைந்திருக்குகிறது! காலம் நெருங்கி விட்டதுபோலும்!

[சாந்தத்துடன் நடந்து விருக்ஷத்தின் கீழேபோய் உட்காருகிறார்.]

காமன் தோன்றுகிறான்.

கா. இதுதான் நல்ல சமயம் இவரது நலத்தை யழித்திட! சந்திரனும் பூரண கும்பம்போல் எழுகிறான், தென்றலும் மெல்லென வீசுகிறது, இவ்வாற்றின் ஜலமும் ரமணீயமாய் ஓடுகிறது, வண்டுகளும் ரீங்காரம் செய்கின்றன, மலர்களெல்லாம் மலர்கின்றன. இச்சமயம் என் பாணத்திற் கிரையாகாமற் போகிறாரோ பார்ப்போம்

[தன் கரும்பு வில்லை வளைத்து பஞ்ச பாணங்களை எய்கிறான். அவை பயனின்றி சித்தார்த்தர் பாதத்தில் விழுகின்றன.]

ஆசை, வேதனி, மாயை எனும் மாரன் மங்கையர் மூவர் வருகின்றனர்.

ஆ. என்ன காமதேவனே, உம்முடைய ஜபம் ஒன்றும் சாயவில்லைபோ லிருக்கிறதே.

கா. ஆமாம், உங்களுடைய ஜபம் மாத்திரம் சாயப்போகிறதென்று எண்ணுகிறீர்களோ ?

மா. எங்களுக்கு சந்தேகமாகத்தானிருக்கிறது ஆயினும் எங்கள் தகப்பனுருடைய கட்டளைப்படி நாங்கள் முயன்றுதான் பார்க்கவேண்டும்.

வே. என்ன! எங்களாலாகாமற் போகிறதோ பார்க்கிறோம்.

ஆ. காமதேவனே, நீர் ஒருபுறமாயிருந்து எங்களுக்கு உதவி புரியும்.

கா. பார்க்கிறேன்.

[மறைகிறான்; மாரன் குமரிகள் மூவரும் சித்தார்த்தர் எதிரில் ஆடிப்பாடி நடிக்கின்றனர்.]

ஆ. சித்தார்த்தரே! இதென்ன தவம் ? இதனால் என்ன பலன் அடைந்தீர் இதுவரையில்? உமதழகிய மேனி வாடியதே யொழிய வேறொன்றில்லை ; இன்பத்தைப் பெற

விரும்பின் இது வழியல்ல. இதை விட்டொழியும், என்னிடம் வாரும், உமக்கின்பத்தை யூட்டுகிறேன் இச்சமயத்தை கைவிடாதீர்.

வே. என்ன சித்தார்த்தரே! என்னைக் கடைக்கண்ணாலும் திரும்பிப் பார்க்கமாட்டீரா? மண்ணுலகத்தவர் தவமிழைப்பது விண்ணுலகைப்பெற, விண்ணுலகத்தைப் பெறுவது கண்ணினிய காரிகையரைப்பெற! அங்ஙனமிருக்க, நானே உம்மை வந்து வரிக்கும்பொழுது உமக்கு இத்தவமேன்? எழுந்திரும் விரைவில், சந்திரனுதயமாயினான், நன்றாய் நிலவு எங்கணும் காய்கிறது; என்ன சும்மா இருக்கிறீர்?—அடி அக்காள்! இது சித்தார்த்தரல்ல அக்காள்! ரசிக சிகாமணியாகிய சித்தார்த்தராயிருந்தால் இந்நேரம் சும்மா இருப்பாரோ? யாரோ வயது சென்ற கிழம், நோய் மூப்பினால் பீடிக்கப்பட்டிருக்கிறாற் போலிருக்கிறது—அதுதான் சும்மா இருக்கிறது. அல்லது அஞ்ஞாதவாச அர்ஜுனனுடைய பந்துவோ?

மா. சித்தார்த்தரே! அவர்கள் சொல்வதை யெல்லாம் கேளாதீர்; என் விண்ணப்பத்தைக் கேட்டருளும். நான் உமது பேரெழிலைக்கண்டு உம்மீது காதல்கொண்டு வாடி நிற்கிறேன், இச்சமயம் அப்பாவி காமதேவன் என்மீது நான்கு பாணத்தையும் தொடுத்துவிட்டான், இன்னும் ஒன்றுதான் மிகுதி யிருக்கிறது; அதையும் தொடுப்பானாயின் என் ஆவி போகும். ஆகவே எல்லா உயிர்களுக்கும் கருணை புரிய விரும்பும் நீர், என்மீது கருணை புரியாமலிருக்கலாமா? நாதா! எழுந்திருந்து இக்காமனை துறத்தி, என்னை அங்கீகரித்து என் உயிரைக் காப்பாற்றும்.

சி. பெண்காள், ஏன் வீணில் சிரமப்படுகிறீர்கள்? கொஞ்சம் இளைப்பாறி விட்டு நீங்கள் வந்த இடம் போய்ச் சேருங்கள்.

காமன் ஒருபுறமாக மறுபடி தோன்றுகிறான்.

மூவரும் ஐயா ! காமதேவனே ! நீங்கள் கூறியபடி எங்கள் ஜபம் ஒன்றும் சாயவில்லை.

கா அதிருக்கட்டும்—எனக்கு ஒரு நூதன யுக்தி தோன்றுகிறது. நீங்கள் மூவரும் இவ்விடம் விட்டுப் போங்கள்; போய், ஒருத்தி சித்தார்த்தருடைய மனைவி ரூபம் தரித்து, இவரை மயக்கப்பாருங்கள்; அதிலும் கட்டுப்படாமலிருக்கிறாரோ பார்ப்போம்; நானும் மறைந்திருக்கிறேன்.

[மறைகிறான் ; மங்கையர் மூவரும் போகின்றனர்.]

மாயை, யசோதரையின் ரூபத்துடன் மறுபடி வருகிறாள்.

மா. பிராணநாதா ! பிராணநாதா ! எத்தனை வருஷங்களாக உம்மைத் தேடித்திரிந்தேன் நான் ! இப்பொழுதாவது தெய்வாதீனத்தால் கண்டு பிடித்தேனே ! பிராணநாதா! இத்தனை நாள் என்னைவிட்டுப் பிரிந்திருக்க உமக்கு மனம் எப்படி வந்ததோ? உமது மனம் வெறுத்த போதிலும் என் மனம் வெறுக்கவில்லை. பிராணநாதா! என்ன மெலிந்து போயிருக்கிறீர்! இவ்வாறு கஷ்டப்பட்டென்ன பிரயோசனம்? வாரும் நமது ஊருக்குப் போவோம். இனி உம்மைப் பிரிந்து அரை க்ஷணமும் உயிரோடிரேன்—என்ன சும்மா இருக்கிறார் ? என் காது குளிர ஒரு வார்த்தையேனும் பேசமாட்டீரா ?—சரி உமதிஷ்டம். நீர் என்னுடன் வராவிட்டால், நான் இவ்விடமே உம்முடன் இருக்கப்போகிறேன்—பிராணநாதா, என்ன வாடிய முகத்துடன் இருக்கிறீர் ? எனைக் கட்டியணைத்து ஒரு முத்தம் கொடும், இவ் வாட்டம் எல்லாம் போம். அதுவும் செய்யமாட்டீரா ?— அதெல்லாம் போகட்டும் போகிறது, உமது மனத்தைச் சந்தோஷிப்பிக்க

விரும்பி நான் ஒரு நூதனமான நர்த்தனம் கற்றுக் கொண்டிருக்கிறேன்—அதையாவது கண்டு மகிழும்.

[நர்த்தனம் செய்கிருள்; மற்ற இருவரும் காமனுடன் ஒரு புறமாக வந்து நிற்கின்றனர்.]

சி. மாய்கையே! நீ யாருடைய மெய்யைப் பொய்யாகத் தரித்திருக்கிருய் என்று நன்ருயறிந்துள்ளேன். உன் யத்னம் பிரயோஜனமற்றது. யசோதரையின் அழகிய உருவத்தைத் தரித்தபடியால் உன்னைச் சபிக்காது விட்டேன். உலக ஆடம்பரமெல்லாம் உன்னைப்போல் மாய்கைதான் என்பதைக் கண்டேன். ஆகவே, வந்தவிடம் போய்ச் சேர்.

[மூன்று மங்கையரும் காமனும் மறைகின்றனர். பிறகு இருள் சூழ்கிறது. குரோதம, மாச்சரியம், லோபம், அகங்காரம், அவா, அவித்யை முதலிய, கோர ரூபங்களுடன் வந்து, அவரை அதட்டி வசியப்படுத்தப் பார்க்கின்றன. பிறகு ஒவ்வொன்ருய் மறைகின்றன. பிறகு புத்தர் ஞானத்தைப் பெறுகிருர்; புஷ்பமழை பொழிகிறது; துந்துபி முழங்குகிறது.]

அசரீரி. [ஆகாயத்தினின்றும்] புத்தரே! நீர் நெடுநாள் தேடியதை இன்று பெற்றீர்! மனோதுக்கத்திஞல் வாடுகின்ற மனிதர்கள் மீது தயை வையும், தரணியிலுள்ளோர் எல்லாம் தத்தம் பலனையே கருதி உழைக்கின்றனர், பிற உயிரோம்புதலைப் பேணிலர், அவர்களுக்கெல்லாம் அறநெறியினை உபதேசம் செய்து, அத்தீய வழியினின்றும் அவர்களை அகற்றி, உலகமெலாம் உஜ்ஜீவிக்கும்படிச் செய்வீராக!

காட்சி முடிகிறது.

# ஐந்தாம் அங்கம்.

## முதற் காட்சி.

இடம்—காசியில் மிருகதாவம் எனும் வனத்தில்
ஒரு பர்ணசாலை.

கௌண்டின்யகுலபுத்ரர், தசபலகாசியபர், பாஷ்பர்,
பத்திரர் நால்வரும் உட்கார்ந்துகொண்
டிருக்கின்றனர்.

கௌ. எங்கே அஸ்வஜித், காலை முதல் காணோம்?

த. ஹோமத்திற்கு வேண்டிய ஆஜ்யத்தை உபகன் எனும் அந்தணனிடமிருந்து பெற்று வருவதாகச் சென்றார்.— அதோ வருகிறார்போ லிருக்கிறது.

அஸ்வஜித் வருகிறார்.

கௌ. என்ன வெறுங்கையுடன் வந்தாற்போ லிருக்கிறதே?

அ. ஆம்; இதுவரையில் நமக்கு யாகத்திற்கு வேண்டிய ஆஜ்யத்தை யெல்லாம் கொடுத்துவந்த உபகன், இன்றைத் தினம் கேட்டபொழுது, தவத்தினாலும் யாகத்தினாலும் ஒன்றும் பிரயோஜன மில்லையென்று எனக்கு போதிக்க ஆரம்பித்தான். இதைக் கேட்டு ஆச்சரியமுற்று, விசாரித்ததில், கௌதம பிட்சு தன்னிடம் வந்து, அவைகளினால் பிரயோஜனமில்லை என்று போதித்ததாகவும், அந்த நியாயங்களை யெல்லாம் தான் ஒப்புக்கொண்டதாகவும் கூறினான்.

பா. எந்த கௌதம பிட்சு, நம்மோடு சில வருஷங்களுக்கு முன் தவம் செய்து கொண்டிருந்தானே அவனா?

அ. ஆம் ஆம்.

பத். ஒருநாள் மேற்கொண்ட விரதத்திற்கு பங்கமாக உணவை உண்டபொழுது நாம் கண்டித்தோமே அவனு?

அ. ஆம், அவன்தான்.

கௌ. அவனை இன்னும் அந்த அவிவேகம் விடவில்லை போலும். அப்பொழுதே, நமக்கு உணவால் உடம்பும், உடம்பால் உணர்வும் ஆகுமெனத்தான் எண்ணுவதாக நம்மிடம் கூறினவனல்லவா அவன்?

அ பிறகு உபகனிடம் நான் விசாரித்ததில், நம்மைவரையும் தேடியே காசிக்கு வந்ததாகவும், நாமிருக்குமிடத்தை அவனிடமிருந்து அறிந்துகொண்டு இங்கு நம்மைக் காணப் புறப்பட்டதாகவும் கூறினுன்.—அதோ மெல்ல வருகிறுன் பாருங்கள்!

கௌ. ஆம், அவன் தான்—வரட்டும். முன்பு இவன் தவ பங்கமுற்றவனுகையால் இவனுக்கு நாம் ஒரு மரியாதையும் செய்யக்கூடாது.

மற்றவர். ஆம், ஆம்.

சித்தார்த்தர் வருகிறுர்.

சி. ஓம்! சாந்தி! சாந்தி!

ஐவரும். சித்தார்த்தரே! வாருங்கள்! வாருங்கள்!

[எழுந்து உபசரிக்கின்றனர்.]

கௌ. இதோ ஆசனம், உட்காரவேண்டும்.

த. இதோ அர்க்கியம்.

பா. இதோ பாத்யம்.

கௌ. சித்தார்த்தரே, உமது முகத்தில்விளங்கும் தேஜசினுலும், மலர்ச்சியினுலும், நீர் நாடிய துக்க நிவாரண மார்க்கத்தைக் கண்டு பிடித்தது போல் தோற்றுகிறது.

சி. ஆம், கண்டுபிடித்தேன்.

கௌ. அது என்னவோ எங்களுக்குக் கூறவேண்டும்.

சி. தபசிகளே, நான் கண்டு பிடித்ததை உங்களுக்குக் கூறி, நான் அனுபவிக்கும் அழிவிலா அளவிலா ஆநந்தத்தை உங்களையும் அனுபவிக்கச் செய்ய வேண்டுமென்றே உங்களிடம் அணுகினேன்.—தயவுசெய்து நான் சொல்வதைக் கவனித்துக் கேளுங்கள்.

ஐவரும். அப்படியே கேட்கிறோம்.

சி. தபசிகளே, உண்டியை ஒடுக்கி, உபவாச மிருந்து உக்கிர தவஞ் செய்வதினால், துக்க நிவாரணமாகிய தூய தோர் முக்தியை யடைகிறோ மில்லை. தலையை முண்டனம் செய்து கொள்வதாலும், அல்லது சடைமுடி தரித்தலாலும், திகம்பரனா யிருப்பதாலும், அல்லது தேகத்தில் புழுதியைப் பூசிக்கொள்வதாலும், துக்கத்திற்குக் காரணமாகிய அவித்யை போகுமோ? வேதங்களை ஓதுவதினாலும், வேதியர்களுக்கு வழங்குவதினாலும், விரதாதிகளால் தேகத்தைக் குன்றச் செய்வதினாலும், யாகாதிகளால் தேவர்களைத் திர்ப்தி செய்வதினாலும், மந்திரங்களை ஜெபிப்பதினாலும், இவைகளினால் ஒருவனுடைய மனம் பரிசுத்த மாகுமோ? உடம்பை மெலியச் செய்வதினால், ஒருவன் உணர்ச்சியும் மெலி வடைகிறது. அப்படிப்பட்ட உணர்ச்சி, உண்மையை எங்ஙனம் அறியும்? உண்மையாம் ஒளியினைக் காணவேண்டுமென்றால், உடம்பாம் விளக்கினை ஜாக்கிரதையாகப் பாதுகாத்திடல் வேண்டும். அதற்கு அதிக உணவும் அடாது, குறைந்த உணவும் கூடாது, மிதமான உண்டியே, மெய்ந்நெறியினைக் காண்டற்கு அநுகுணமாம். ஆகவே இவ்வுடலைத் தக்கபடி பாதுகாத்து, துக்கத்திற்குக் காரணமாகிய பஞ்சேந்திரியங்களையும் தன் வசப்படுத்தி, அகங்கார மமகாரங்களை அறவே ஒழித்து, பரிசுத்தமான மனத்தினனாகி, பற்றற்றுப் பயன் நோக்காது நற் கருமம் செய்பவனெவனோ,

அவனே துக்க நிவாரணமான மார்க்கத்தைக் கண்டவனுவான்; பற்றற்றதெனின் உற்றது வீடு என்னும் பழமொழிப்படி அந்நிலையை அடைந்தவன், அழிவிலா அளவிலா ஆனந்தத்தை அடைந்தவனுவான். அன்றியுந்தோற்றுவனவெல்லாம் நிலையற்றன, அவை பிறப்பிறப்பிற்குட்பட்டவை என்பதை அறிந்து, எக்காலத்து இந்த ஜனனமரண நியமம் நீங்குகிறதோ, அக்காலத்தே தான் ஆனந்த நிலையை அடைவான். அதன்மேல் அவனுக்கு துக்கம் என்பது கிடையாது, பிறப்பென்பது கிடையாது, அவன் இறுதியில் நிர்வாணத்தை அடைவான். இதுதான் நான் கண்டறிந்த, துக்கம், துக்கோத்பத்தி, துக்க நிவாரணம், துக்க நிவாரணமார்க்கம் எனும் சத்ய சதுஷ்டயத்தின் சாரம். உங்களுக்கிதைச் சுருக்கிச் சொன்னேன். அதை நீங்களும் அங்கீகரித்து, அதன்படி நடப்பீராகில் நீங்களும் என்னைப்போல் ஆநந்தத்தை அடையலாம். அங்ஙனமே அடைவீர்களாக!

கௌ. சித்தார்த்தரே! நீரே புத்தன்! நீரே புத்தன்! எங்களுக்கெல்லாம் புத்தியிருந்தும் எதற்காயது? இந்த உண்மையை இதுவரையிற் கண்டுபிடியாமற் போனோமே! ஆகவே நீர்தான் எங்களுக்கு குரு.—நாங்கள் உமது சிஷ்யர்கள். இன்று முதல் இவ் வுண்மை நெறியினை நீர் எங்களுக்கு இன்னும் நன்ருய் உபதேசித்தருளவேண்டும்.

அ. சித்தார்த்த புத்தரே! அந்த சத்ய சதுஷ்டயத்தைப் பற்றி இன்னும் விவரமாய், உமது இனிய குரலால், நீர் எடுத்துரைக்கக் கேட்கவேண்டுமென்று ஆவல் பெருகுகிறது எங்களுக்கு.

சி. நண்பர்களே, அப்படியே செய்கிறேன். நான் கண்டெடுத்த நீதி மற்றவர்களுக்கு வழங்க வழங்கக் குறைவதன்று, விர்த்தியாவதேயாம், ஆகவே மிகுந்த சந்தோஷத்துடன் சொல்லுகிறேன். ஆயினும் நீங்கள் பசித்

திருக்கிறீர்போலத் தோற்றுகிறது, ஆகவே நீங்கள் போஜனம் கொண்ட பிறகு ஆகட்டும்.

கௌ. புத்தரே! இன்றே சுதினம்! இன்றே எங்களுக்கு சுதினம்! இன்றே எங்களுக்குத் தம்மால் ஞானோதயமான நாள்! அடியேங்கள் பர்ணசாலைக்கு எழுந்தருள வேண்டும்.

சி. ஓம்! சாந்தி! சாந்தி!

[எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

—:—

## இரண்டாம் காட்சி.

இடம்—ராஜக்கிரஹத்தைச்சார்ந்த வேணுவனம்.

நடுவில் சித்தார்த்தர் உபதேச நிலையில் வீற்றிருக்கிறார்.

இருமருங்கிலும் பிம்பசாரன் முதலிய அரசர்களும், சாரீபுத்ரன், மௌத்கல்யாயனன், அக்னிகாஸ்யபர், அஸ்வசித், பாஷ்பர், மஹாகாஸ்யபர் முதலிய பிட்சுக்களும் நிற்கின்றனர்.

பிம். பகவன், அடியேன் மீது அருள் சுரந்து தங்களால் அங்கீகரிக்கப்பட்ட இந்த வேணுவன விஹாரம், தங்களுக்கு சவுகர்யமா யிருக்கிறதோ ?

சி. பிட்சுக்களே, உங்களுக்கெல்லாம் சவுகர்யமாயிருக்கிறதா இந்த விஹாரம் ?

பிட்சுக்கள். பகவன்! மிகவும் சவுகர்யமா யிருக்கிறது! மிகவும் சவுகர்யமா யிருக்கிறது !

சி. பிம்பசாரா, கேட்டனையா? சந்தோஷம் தானா?

பிம். பகவன், கேட்டேன், சந்தோஷம்தான்—ஆயினும்—

சி. என்ன கேள் ?

பிம். தங்களுக்கு சவுகர்யமா யிருக்கிறதோ இல்லையோ என்று தெரிவிக்கவில்லையே?

சி. பிம்பசாரா, எனக்கு எதுவும் சவுகர்யமென்றும் அசௌகர்யமென்றும் கிடையாது, என்பதை நீ அறிந்திருக்கிறாயல்லவா? ஆயினும் என்னிடமிருந்து விடை விரும்புவதனால், இதையே விடையாகக்கொள். மற்றவர்களுக் கெது சவுகர்யமோ அதுதான் எனக்கும் சவுகர்யம்.

ம-கா. பிட்சுக்களே! இதனால் ததாகதர் நமக்கு போதித்த புத்திமதியைக் கருத்துள் நிறுத்துவீராக!

அநாதப்ரிபாலகன் வருகிறான்.

அவன் பின்னால் சில வேலையாட்கள் பிட்சுக்களுக்குரிய வஸ்திரங்கள் பாத்திரங்கள் முதலியன காணிக்கை யாகக் கொண்டு வருகின்றனர்.

அநா. புத்தமணி! அடியேன் நமஸ்கரிக்கிறேன்.

[நமஸ்கரிக்கிறான்.]

சி. அப்பா, நீ யார்?

அநா. நான் அநாதபரிபாலகன் என்னும் வணிகன். ஸ்ராவஸ்தி நகரவாசி.

சி. என்ன காரணம்பற்றி இங்கு வந்தாய்?

அநா. பகவன்! இரண்டு காரணங்கள் பற்றி; முதலாவது, அடியேன் கொண்டு வந்திருக்கும், தங்களுக்கும் தமது சங்கத்தினருக்கும் உபயோகப்படத்தக்க, இந்த துவராடைகள் பிட்சாபாத்திரங்கள் முதலியவற்றை, தாம் காணிக்கையாக அங்கீகரிக்கவேண்டுமென்பது.

சி. நீ அன்போடு அளிக்கும்படியான இவைகளை, ததாகதன் அப்படியே அங்கீகரிக்கின்றான்—இரண்டாவது காரணம் என்னவோ?

அநா. புத்தமணி! தங்களுடைய தர்மத்தைப்பற்றி எல்லோரும் புகழக் கேள்விப்பட்டு அதைக்காதார நேரிற் கேட்க வேண்டுமென்று வந்திருக்கிறேன்.

சி. ஐயா, ததாகதன்தான் கூறவேண்டுமோ, அல்லது அறிந்த மற்றப் பிட்சுக்களில் யாராவது கூறினாற் போதுமோ?

அநா. தமக்குச் சிரமமா யில்லாவிட்டால் தமது திருவாக்கினின்றும் கேட்க மிகவும் ஆவல் கொண்டிருக்கிறேன்.

பிட்சுக்கள். பகவன்! நாங்களும் அப்படியே விரும்புகிறோம். தாங்கள் எத்தனையோ முறை பிறருக்குக் கூறக்கேட்டும், இன்னும் கேட்கவேண்டுமென்கிற உவகையிருக்கிறது எங்களுக்கு, சலிப்பென்பது சற்றேனுமில்லை, அன்றியும் ஒவ்வொருமுறை கேட்குந்தோறும் புதிய புதிய அர்த்தங்கள் தோன்றுகின்றன.

சி. உங்கள் இஷ்டம், கேட்பவர்களுக்குசிரமமில்லாவிட்டால் சொல்பவனுக்கு என்ன சிரமம் இருக்கப்போகிறது— அநாதபரிபாலகா, அலுப்படைந்திருக்கிறாற்போல் காண்கிறது, அருகில் வந்து உட்கார்; பிட்சுக்களே, ஏனையோரே, எல்லோரும் அமருங்கள்.

[எல்லோரும் உட்காருகின்றனர்.]

நண்பர்களே! இவ்வுலக வாழ்க்கையில் துக்கம் என்பது எதினிலும் எள்ளுக்குள் எண்ணெய்போ லிருக்கிறதென்று நாம் எல்லோரும் ஒப்புக்கொள்ள வேண்டியதல்லவா?

மற்றவர். ஆம் ஆம்!

சி. பிறப்பதே துன்பம், பிணி துன்பம், மூப்பு துன்பம் சாக்காடு துன்பம், அன்பில்லாரோடு தொடர்பு துன்பம், அன்புள்ளாரிடத்தினின்றும் பிரிதல் துன்பம், விரும்பியதை அடையாமை துன்பம், வெறுப்புள்ளதைப் பெறு

வது துன்பம், சுருக்கிச் சொல்லுமிடத்து ஐம்புலப் பற்றும் துன்பமே யன்றோ ?

மற்றவர். ஆம் ! ஆம் !

சி. இதுதான் ததாகதன் அறிந்த முதல் சத்யம். துக்க மிருப்பதைக் கண்டபின், துக்கத்தின் காரணத்தை கண்டறிய வேண்டியது அறிவாளியின் கடமை யாகிற தல்லவா ?

மற்றவர். ஆம் ! ஆம் !

சி. இந்த துக்கத்திற்கு காரணமென்னவென்று ஆராய்வோம். அவித்தை அல்லது பேதமையிலிருந்து சம்ஸ்காரங்கள் உண்டாகின்றன! சம்ஸ்காரத்திலிருந்து விஞ்ஞானம் அல்லது உணர்வு உண்டாகிறது. விஞ்ஞானத்திலிருந்து நாமரூபங்கள் அல்லது அருவுரு உண்டாகின்றன ; நாமரூபங்களிலிருந்து ஷட் ஆயதனங்கள் அல்லது வாயில்கள் உண்டாகின்றன. அந்த ஆயதனங்களிலிருந்து ஸ்பர்சம் அல்லது ஊறு உண்டாகிறது, ஸ்பர்சத்திலிருந்து வேதனை அல்லது நுகர்வு உண்டாகிறது, வேதனையிலிருந்து திருஷ்ணை உண்டாகிறது. திருஷ்ணையிலிருந்து உபாதானம் அல்லது பற்று உண்டாகிறது. உபாதானத்திலிருந்து பவம் அல்லது பிறப்புக்கு மூலமான கர்மக்கூட்டம் உண்டாகிறது. பவத்திலிருந்து பிறப்புண்டாகிறது, பிறப்பினின்றும் மூப்பும், பிணியும், வலியும், மரணமும், அழுகையும், துன்பமும், கவலையும், ஏக்கமும் ஆகிய வினைப்பயன்கள் உண்டாகின்றன. ஆகவே துன்பம் என்கிற ராஜ்யத்திற்கு இதுதான் உற்பத்தி. இதுதான் ததாகதன் அறிந்த இரண்டாவது சத்யம்.

மற்றவர். நன்று ! நன்று !

சி. பிறகு, துக்கத்தின் காரணத்தை அறிந்த பின், துக்கத்தின் நிவாரணத்தை கண்டு பிடிப்பது கடமையாகிறது.

மற்றவர். ஆம் ஆம்!

சி. முதலிலிருந்து பார்க்குமிடத்து, அவித்தையானது ஆசையை முற்றுந் துறப்பதினால் போக்கப்படுகிறது; அதனால் சம்ஸ்காரங்கள் போக்கப்படுகின்றன; சம்ஸ்காரங்களைப் போக்குவதினால் விஞ்ஞானம் போக்கப்படுகிறது; விஞ்ஞானத்தைப் போக்குவதினால் நாமரூபங்கள் போக்கப்படுகின்றன; நாமரூபங்களைப் போக்குவதினால் ஷடாயதனங்கள் போக்கப்படுகின்றன; ஷடாயதனங்களைப் போக்குவதினால் ஸ்பர்சம் போக்கப்படுகிறது; ஸ்பர்சத்தைப் போக்குவதினால் வேதனை போக்கப்படுகிறது; வேதனையைப் போக்குவதினால் திருஷ்ணை போக்கப்படுகிறது; திருஷ்ணையைப் போக்குவதினால் உபாதானம் போக்கப்படுகிறது; உபாதானத்தைப் போக்குவதினால் பவம் போக்கப்படுகிறது; பவத்தைப் போக்குவதினால் பிறப்பு போக்கப்படுகிறது; பிறப்பை போக்குவதினால், பிணி மூப்பு சாக்காடு முதலிய துக்கங்களெல்லாம் போக்கப்படுகின்றன; துன்பம் என்கிற ராஜ்யத்திற்கெல்லாம் இதுதான் நிவர்த்தி இதுதான் ததாகதன் அறிந்த மூன்றாவது சத்யம்.

மற்றவர் நன்று! நன்று! புத்தமணி!

சி. ஆகவே துக்கத்திற்கெல்லாம் ஆதி காரணமாயிருக்கப்பட்ட ஆசையை அடியுடன் அழிக்கவேண்டும். ஆசையாகிய பற்றற்றதெனின், உற்றது வீடாகிய முக்தி. ஆகவே துக்கநிவாரணத்தை யறிந்தபின், துக்க நிவாரண மார்க்கத்தைத் தேடவேண்டுமல்லவா?

மற்றவர். ஆம் ஆம்! சத்யம் சத்யம்!

சி. அம்மார்க்கமானது எட்டு வகைப்படும். அவை, நற்காட்சி, நல்லூற்றும், நல்வாய்மை, நற் செய்கை, நல்வாழ்க்கை நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர் தலைப்பாடு, என்பனவேயாம். இதுதான் ததாகதன்

அறிந்த நான்காவது சத்யம். இவ்வெட்டையும் கடைப்பிடித்து நடப்பவன் விசுத்தி மார்க்கத்திற் செல்கிறான்.

அநா. பகவன்! இந்த விசுத்தி மார்க்கத்தில் நடப்பவர்களுக்கு முக்கியமாக என்ன குணங்கள் இருக்கவேண்டுமோ, அதை அறிய விரும்புகிறேன்.

சி. மூன்று குணங்கள் முக்கியமாக இருக்கவேண்டும்.—அவை சீலம் சமாதி பிரஞ்ஞை. சீலமாவது, விலக்கியவற்றை ஒழித்து விதித்தவற்றையே செய்தல், சமாதியாவது மனதை ஒருமுகப் படுத்துகை, பிரஞ்ஞையாவது மெய்ஞ்ஞானம். சீலம், பஞ்சசீலம் அஷ்டசீலம் தசசீலம், என மூவகைப்படும். கொல்லாமை, திருடாமை, விபசரியாமை, பொய் கூறாமை, கள்ளுண்ணாமை, பஞ்சசீலமாம். இவை இல்லறத்தார் எல்லோர்க்கும் உரியன. இவைகளோடு, இரவில் தூய்மை இல்லாத உணவைப் புசியாமை, சந்தன முதலிய மணமுள்ள பொருள்களை உபயோகியாமை, தரைமீது பாய்மேற் படுத்தல் ஆகிய மூன்றும் சேர, அஷ்டசீலமாம், இவை இல்லறத்தாரில் நிஷ்டாபரருக்கே உரியன; இவ்வெட்டினேடு நாட்டியம் கானம் முதலியவற்றை விரும்பாமை, பொன் வெள்ளிகளைத் தொடாமை, இவ்விரண்டும் சேர தசசீலமாம். இப் பத்தும் துறவிகளுக்கே உரியன. இப்படிப்பட்ட சீல சமாதி பிரஞ்ஞையைக் குணங்களாக உடைய விசுத்திமார்க்கத்திற் செல்பவர் விலக்க வேண்டியவை பத்து மனேபாவங்கள் உள்ளன.

அநா. அவை யாவை யென்று அறிய விரும்புகிறேன்.

சி. அவை சத்காய திருஷ்டி, அதாவது உடம்பு உண்மையானதென்னு மெண்ணம், சந்தேகம், பயனை நாடிச் செய்யும் விரதங்கள், சப்தாதி விஷய விருப்பம், கோபம், ரூபராகம், அரூபராகம், கர்வம், தற்புகழ்ச்சி, அஞ்ஞானம்; இப் பத்தினையும் விலக்கி விசுத்தி மார்க்கத்தில்

ஒருவன் நடப்பானாயின் முடிவில் அந்தமில் இன்பத்து அழிவின் வீடெய்துவான்; ஈதே நிர்வாணம், இதுதான் முடிவு.

மற்றவர். நன்று நன்று! மிகவும் நன்று!

சி. ஆகவே நண்பர்களே! அறஞ்செய்மின், மறம் ஒழிமின்.— அன்றியும் காரணமின்றிக் காரிய முண்டாகாதென்று அறிமின்; ஆதலால் காரணத்தைப் போக்கினால் காரியமும் அழியும் என்பதைத் தெரிமின். இதுவே ததாகதன் உலகுக்கெல்லாம் அறிவிக்கும் தர்மம்.

மற்றவர். போற்றி! போற்றி! புத்தமணி! போற்றி! போற்றி!
[வணங்குகின்றனர்.]

அ. குருமணி! அடியேன் தங்கள் அடைக்கலம். அறம் கேட்டு ஐயம் நீங்கப்பெற்றேன். இனி தாங்கள் அடியேனை ஆண்டருள வேண்டும். [நமஸ்கரிக்கிறான்.]

சி. அப்பா, எழுந்திரு, உன்னிஷ்டம் என்ன? இல்லறத்திலேயே இருந்து உபாசகனாகப் பிரியமா, அல்லது துறவறத்தை மேற்கொண்டு பிட்சுவாகப் பிரியமா?

அ. குருமணி, பிறவியாகிய பெருங்கடலைக் கடத்தற்குரிய தெப்பத்தினை எனக்குத் தாங்கள் காட்டியருளிய பிறகு, இச் சம்சார சாகரத்தில் தத்தளிக்க விரும்புவேனோ? என்னை பிட்சுவர்க்கி தங்கள் சேவக சந்நிபாதத்தில் ஒருவனாகச் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

சி. அங்ஙனமே ஆகுக!

காட்சி முடிகிறது.



# மூன்றாம் காட்சி

இடம்—ஸ்ராவஸ்தியில் ந்யக்ரோதவனம்.

சாரீபுத்ரன், மௌத்கல்யாயனன், ராதபாலன், அநாதபரிபாலகன், காஸ்யபன், சுபூதி, பூரணன், காத்யாயனன், வத்சகோத்ரன், மாலங்கன், முதலியவர்கள் புடைசூழ சித்தார்த்தர் வீற்றிருக்கிறார்.

ஒரு பிட்சு வருகிறான்.

பி. பகவன்! தம்மை உடனே காணவேண்டுமென்று ஒரு பெண் பிள்ளை மிகவும் வற்புறுத்துகிறாள்—உத்தரவு எப்படியோ?

சி. அப்பா, உடனே உழைத்துவா.

பிக்ஷு வெளியே போய் கிருசாகௌதமியை அழைத்து வருகிறான்.

கி. பெரியோரே! பெரியோரே! நீர்தான் என்மீது தயை வைத்து என் குழந்தையை உயிர்ப்பிக்கவேண்டும்! உயிர்ப்பிக்கவேண்டும்! [பாதத்தில் விழுந்து புலம்புகிறாள்]

சி. அம்மா, என்ன நடந்தது கூறுவாய்.

கி. நேற்றைத்தினம், இதோ பேச்சு மூச்சற்றிருக்கும் இச்சிறு குழந்தை—என் ஒரே மகன்—புதரொன்றருகினில் ஒரு சர்ப்பத்துடன் விளையாடிக்கொண்டிருந்தான், கொஞ்சம் பொறுத்து நான் போய்ப்பார்க்க அப் பாம்பு காணமற் போயிற்று; இவன் கீழே பேச்சு மூச்சின்றி விழுந்து கிடந்தான்; நான் என்ன தட்டி எழுப்பியும் எழுந்திருக்கவில்லை; என்னுடன் பேசவுமில்லை; மற்றவர்களை நான் கேட்டபொழுது பாம்பு கடித்துவிட்டது இவன் இறந்துவிட்டான் என்றார்கள். அப்படியே இவனை என் மார்மீது இருத்திக்கொண்டு, இவனைப் பிழைப்பூட்டத்தக்க ஔஷதம் யாரிடமாவதிருக்கிறதா

என்று எங்கும் அலைந்து திரிந்தேன். ஒருவரிடமும் கிடையாதென்றார்கள். ஒரு பெரியவர்மாத்திரம் இச் சோலையைக் காட்டி, அம்மா, சித்தார்த்தர் அங்கிருக் கிறார், அவரிடம் போனால் இதற்கு சிகிச்சை சொல்லு வார் என்றார். அதைக்கேட்டவுடன் என் மகனைத் தூக்கிக்கொண்டு உம்மிடம் வந்தேன். நீர் எப்படியா வது இதற்குத்தக்க சிகிச்சை சொல்லவேண்டும், என் மீது தயை கூர்ந்து.

சி. அம்மா, அப்படியே ஆகட்டும்—இதற்கு வேறொன்றும் வேண்டியதில்லை, ஒரு பிடி கடுகு வேண்டும்.

கி. இவ்வளவுதானே?—இதோ போய் க்ஷணத்தில் கொண்டு வருகிறேன். [புறப்படுகிறாள்.]

சி. அம்மா, ஆயினும், அதை வாங்கி வருவதில், ஒருவரும் இறவாத வீட்டிலிருந்து வாங்கிவரவேண்டும்.

கி. அப்படியே ஆகட்டும். [விரைந்து போகிறாள்.]

பி. பகவன்!—ஒரு முறை இறந்த உயிரைப் பிழைப்பூட்டுதல் யார்க்கும் அசாத்தியம் என்று கூறியிருக்கிறீர்களே.

சி. அப்பா, அவசரப்படாதே—கொஞ்சம் பொறு.

ஆனந்தன் வருகிறான்.

ஆ. பகவன்! நேற்றைத்தினம் தங்களுடைய பிட்சாபாத்தி ரத்தைக் கவர்ந்து சென்றவனைக் கண்டுபிடித்து விட் டேன்.

சி. ஆநந்தா, யார் அது?

ஆ. அங்குலிமாலன் என்னும் பிட்சுவே இது செய்தது. அவனது பூர்வாஸ்ரம குணம் இன்னும் அவனை விட்டுப் போகவில்லை போலும்.

சி. அப்பா, அவன் இப்பிறப்பில் மாத்திரம் அன்று, முற் பிறப்பிலும் இங்ஙனமே செய்திருக்கிறான். அதை இன் னொரு சமயம் உங்களுக்கு கூறுகிறேன்.

ஆ. கைப்பிடியாகப் பிடித்தோம். ஆகவே ததாகதர் அவனுக்குத்தக்க தண்டனை விதிக்கவேண்டியது.

சி. தனக்குத் தண்டனை விதிக்கவேண்டுமென்று அந்த பிட்சு உங்களில் யாரையாவது கேட்டானா ?

ஆ. இல்லை — ஆயினும் நாங்கள் கேட்கிறோம்.

சி. அப்படியானால்—அந்த பிட்சுவிடம் இந்த பிட்சாபாத்திரத்தைக்கொண்டுபோய், ததாகதனிடமிருந்து தாங்கள் முன்பு எடுத்துச்சென்ற பாத்திரம் கொஞ்சம் பின்னப்பட்டிருக்கிறது, இது அதைவிட மேலானது, பின்னமில்லாதது வைத்துக்கொள்ளும், என்று ததாகதன் கூறினதாக அவனிடம் கூறி, இதைக் கொடுத்து வாருங்கள்.

ஆ. பகவன் ! உம்முடைய பேரருளை நான் என்னென்று புகழ்வேன் !

சி. புகழவேண்டாம், அதன்படி நடநீயும்.

ஆ. ஆக்கினை !

[அவரது புதிய பிட்சா பாத்திரத்தை எடுத்துக்கொண்டு போகிறான்.]

சி. ராதபாலா, ததாகதனிடம் ஏதோ நீ கேட்க விரும்புவது போலிருக்கிறது.

ரா. ஆம் பகவன் ! கேட்கலாமோ கூடாதோ என்று சந்தேகப் பட்டுக்கொண்டிருந்தேன்.

சி. அப்பா, சந்தேகத்திற்கு எப்பொழுதும் பிட்சுவானவன் இடங்கொடுக்கலாகாது, சந்தேகம் தோன்றியவுடன் அதனை நிவர்த்திக்கும் மார்க்கம் தேடவேண்டும்— ஆகவே தாராளமாய்க்கேள்.

ரா. நான் சூன்யப்பிராந்தமென்னும் இடத்திலிருந்த வந்தவன் என்பது தங்களுக்குத் தெரிந்திருக்கிறது. அங்கே என்னுடைய சுற்றத்தார் அநேகர் இருக்கின்றனர்.

நான் இருந்தது போல் அஞ்ஞானத்தில் மூழ்கி யிருக்கின்றனர். அவர்களுக்கு அவ்விருளைப் போக்கி, தர்மத்தை உபதேசித்து அவர்களை யெல்லாம் கடைத்தேறச் செய்யவேண்டுமென்று அவாவுகிற தென்மனம்; அங்ஙனம் செய்வதற்குத் தாங்கள் விடையளிக்கவேண்டுகிறேன்!

சி. சூனியப் பிராந்தத்திலுள்ள ஜனங்கள் மிகவும் மூர்க்கரன்றோ? அவர்கள் நீ சொல்வதை மதிக்காமல் உன்னை தூஷிப்பாராயின் நீ என்ன செய்வாய்?

ரா. தூஷித்தால் தூஷிக்கட்டும் என்று பேசாதிருப்பேன், அம்மட்டும் அடியாதிருக்கிறார்களே என்று சந்தோஷப் படுவேன்.

சி. ஒருகால் அவர்கள் கோபங்கொண்டு உன்னை அடிப்பாராயின் நீ என்ன செய்வாய்?

ரா. நான் மாறாக அவர்களை அடிக்கமாட்டேன். கொல்லாது விட்டார்களே என்று சந்தோஷப்படுவேன்.

சி. அவர்கள் ஒருகால் உன்னைக்கொல்ல ஆரம்பித்தால் என்ன செய்வாய்?

ரா. அப்பொழுதும் அவர்கள் மீது பகைமை பாராட்டமாட்டேன். இவ்வளவு சீக்கிரத்தில் இவ்வுலகத்தின் துக்கத்தையெல்லாம் விட்டொழியச் செய்கிறார்களேயென்று சந்தோஷப்படுவேன்.

சி. அப்பா, நீ நாளைக்கே புறப்பட்டுப்போய் எண்ணியவாறே செய்வாய்

கிருசாகௌதமி மறுபடி வருகிறாள்.

அம்மா, கொண்டு வந்தாயா கடுகு நான் கேட்டபடி?

கி. பகவானே! இல்லை. நான் எந்த வீட்டிற்போய்க் கேட்டபோதிலும், எல்லோரும் கடுகைக் கொடுக்கச் சித்தமா

யிருந்தபோதிலும், ஒருவரும் இறவாத வீட்டைக்கண்டே னில்லை. எங்கு கேட்டபோதிலும் என் தந்தை இறந்தார், என் தாயார் இறந்தார், என் அண்ணன் இறந்தார், தம்பி இறந்தான், தங்கை இறந்தாள், பிள்ளை இறந்தது பெண் இறந்தது, என்று சொல்லுகிறார்கள். இதைக் கேட்டவுடன் இறப்பது சர்வ சாதாரணம் என்பதையும், பிறப்பதெல்லாம் இறக்கவேண்டுமென்பதையும் அறிந்த வளாய், இதற்காக நாம் துக்கப்படுவானேன் என்று திரும்பி வந்துவிட்டேன்.

சி. அம்மா, இவ்வுண்மையை நீ அறியும்பொருட்டே உனக்கு இவ்வாறு கூறியது—இக் குழந்தையைக் கொண்டுபோய் தகனம் செய்துவிடு.

கி. பகவானே! அப்படியே செய்துவிட்டு வருகிறேன். பிறகு எனக்குத் தாங்கள் ஞானோபதேசஞ் செய்து என்னையும் தங்களுடைய பிக்ஷுணிக் கூட்டத்தில் ஒருத்தியாக்கிக் கொள்ள வேண்டுகிறேன்.

சி. அங்ஙனமே ஆகுக! [கிருசாகௌதமி போகிறாள்.]

பிட்சுக்கள். ததாகதர் அறநெறியை அறிவிக்கும் விதமே விதம்!

சி. பிட்சுக்களே, நண்பர்களே, இன்றைத்தினம் நீங்கள் ததாகதனிடமிருந்து அறிந்துகொள்ள விரும்பும் விஷயம் ஏதாவதுண்டோ?

வ. ததாகதரே, ஆன்மா என்று ஒன்று உளதோ?—என்ன சும்மா இருக்கிறீர்?—ஆயின், ஆன்மா என்று ஒன்று இல்லை, என்பது உம்முடைய தாத்பர்யமோ?

மா. ததாகதரே, தேகம் நிலையற்றது என்றீரே, இவ்வுலகம் நிலையுள்ளதா, நிலை யற்றதா?—என்ன இதற்கும் சும்மா இருக்கிறார்?

ம. கா. ஐயா, ததாகதர் மௌனமா யிருப்பதினால், இப்படிப் பட்ட ஆராய்ச்சிகள் நிஷ் பிரயோஜன மானவை என்று

நாம் அறிந்துகொள்ள வேண்டும். பயனற்ற விஷயங்களைப் பற்றி வார்த்தையாடுவதில் பிரயோஜனம் இல்லையென்று முன்பே நமக்குத் தெரிவித்திருக்கிறார் அல்லவா?

மௌ. பகவன், நேற்றைத்தினமே ஒரு சந்தேகம் உங்களைக் கேட்கவேண்டு மென்றிருந்தோம், ஆயினும் உபாலி எங்களுடன் இருந்தமையால் அவன் முன்னிலையில் கேட்பது தவறென்று கேளாதொழிந்தோம். இப்பொழுது உபாலி இங்கிராமையால் கேட்கிறோம்—உபாலி ஜாதியில் அம்பட்டனாச்சுதே, அவனையும் பிட்சுவாக்கி அவனுடன் நாங்கள் சமபோஜனம் கொள்ளல் முறையோ என்பதுதான். இதைக்கேட்டது தவறாக இருந்தால் மன்னிக்க வேண்டுகிறோம்.

சி. மௌத்கல்யாயனா, இதைக் கேட்டது தவறன்று, இதுவரையில் கேளாதிருந்ததே தவறாகும். ததாகதன் உங்கள் சந்தேகத்தை நிவர்த்திக்கிறேன். பிட்சுக்களே! தர்மத்தைக் கடைப் பிடித்து, விசுத்தி மார்க்கத்தில் நடந்து முடிவில் நிர்வாணம் பெறுவதற்கு, பிராம்மணனா யிருந்தா லென்ன, சண்டாளனா யிருந்தா லென்ன? இருவருக்கும் வழியொன்றே. அன்றியும் உபாலி ஜாதியில் அம்பட்டன் என்றீர்களே, அந்த ஜாதி என்பது என்னவென்று யோசித்துப் பாருங்கள். பிறக்குங்கால் கீழ்ப்பட்ட ஜாதியான் என்று கருதப்படுபவனுக்கும், மேம்பட்ட ஜாதியான் என்று கருதப்படுபவனுக்கும், ஏதாவது பேதமிருக்கிறதா? இருவருடைய உடலிலும் வேற்றுமைப்பாடு ஏதாவதுளதா? இருவருடைய ரக்தத்திலும் நிறம் மாறுபாடு ஏதேனும் உண்டா? இருவரும் அனுபவிக்கும் சுகதுக்கங்களில் இன்ன வித்யாசம் இருக்கிறதென யாராவது கூறமுடியுமா? பிறக்கும்போழுது யாராவது புவியில் பூணூலோடு பிறக்கிறார்களா? ஜாதி பேதமெல்லாம் நாமாகப் பார்த்து நடு

வில் வைத்துக்கொண்டதேயொழிய இயற்கையில் என்ன தாரதம்யம் இருக்கிறது? புத்தியைக்கொண்டு ஆராயுங்கால், புவியில் இரண்டு பேதங்களே புலப்படுகின்றன. அவை, உலகத்தில் உயிர்படைத்த பிராணிகளின்மீதெல்லாம் உள்ளத்தில் அருள்சுரந்தவனாகி, தர்ம வழியில் நடக்கும் சீலவானே மேலானவன், அவனையே அந்தணனெனக் கூறவேண்டும்; அங்ஙனம் நடவாது காருண்யமென்பதில்லாது அதர்ம வழியில் ஒழுகும் சீலமில்லாதவனே கீழ்ப்பட்டவன், அவனையே கிராதன் எனக்கூறல் வேண்டும்; ஜாதி இவையிரண்டொழிய வேறில்லை; அன்றியும் முற்றுந் துறந்த துறவிகளாகிய உங்களுக்கு ஜாதி என்கிற பற்றொன்றிருக்கலாமா? நான், எனது, என்கிற எண்ணம் பூர்ணமாக நசித்தால், உயர்ந்த ஜாதி தாழ்ந்த ஜாதி என்னும் வார்த்தைகளே நாவினாலும்நவிலப்படுமோ?

**பிட்சுக்கள்.** பகவானே! கூடாது கூடாது, சத்யம் சத்யம்!

**சி.** ஆகவே, இன்றைத்தினம் இதுகாறும் பரத்தையர்தொழிலைப் புரிந்து வந்து, இப்பொழுது தர்ம நெறியைக் கைப்பிடித்த, அறம்பாலி வீட்டில் பிட்சை கொள்வோம் வாருங்கள். இன்று காலை வந்து அழைத்தனள்.

**பிட்சுக்கள்.** அப்படியே அப்படியே.

**சி.** ஓம்! சாந்தி! சாந்தி! சாந்தி!

[எல்லோரும் போகிறார்கள்.]

**காட்சி முடிகிறது.**

## நான்காம் காட்சி.

இடம்:—கபிலவாஸ்து அரண்மனையில் ஓர் தோட்டம்.

யசோதரை, ராகுலன், சித்திரை
வருகிறார்கள்.

ரா. அம்மா! அம்மா! அதோ பாருங்கள் என் தாமரைப் புஷ்பம் பூத்திருக்கிறது! [குளத்தருகில் ஓடுகிறான்.] சித்திரை! சித்திரை! குட்டி மீன்களெல்லாம் என் குரலைக்கேட்டு வந்திருக்கின்றன கரையோரம்—கொஞ்சம் பொரிகொண்டுவா சீக்கிரம், அவைகளுக்கு என் கையால் போடவேண்டும். [சித்திரை போகிறாள்.]

ய. ஆ! சூரியனைக்கண்டு இத்தாமரை மலர்ந்ததுபோல என் பிராணநாதரைக் கண்டு என் மனமாகிய தாமரை எப்பொழுது மலருமோ? எத்தனை வருஷங்களாக இப்படிக் கழிப்பேன்? ஐயோ! அவர் எந்த ஸ்திதியிலிருந்தபோதிலும் என் கண்ணார அவர் உருவைக்கண்டு, என் காதார அவரது மொழிகளைக் கேட்பேனாயின், என் துயரமெல்லாம் பறந்தோடிப்போமே! எங்கும் ஒளிர்கின்ற ஆதித்யனே! எங்கணும் வீசாநின்ற வாயுபகவானே! எதையும் கவர்ந்து நிற்கும் ஆகாயமே! என்னுடைய பிராணநாதர் எங்கிருக்கிறார் என்று தேடிக்கண்டு பிடித்து, அவரிடம் என் கதியை உரைத்து, அவரைச் சீக்கிரம் காணாவிட்டால், அவரது மொழியாகிய அமுதம் என்செவியிற் படாவிட்டால், சீக்கிரம் உயிர் துறப்பேன் என்று கூறமாட்டீரா?—

சித்திரை விரைந்து வருகிறாள்.

சி. அம்மணி! அம்மணி! உமது விரதம் நிறைவேறும் காலம் வந்துவிட்டது. அரண்மனைக்கு இரண்டு வியாபாரிகள் ஹஸ்தினாபுரத்திலிருந்து வந்திருக்கிறார்கள். அவர்கள் இளவரசரை நேரிற் கண்டதாகவும், அவர் நம்முடைய

பட்டணத்திற்கே புறப்பட்டு வருவதாகவும், சொல்லு கிறார்கள்.

ய. அப்படியா? அப்படியா? ஆனால் அவர்களை உடனே இங்கு வரவழை. நான் என் காதார நேரிற் கேட்க வேண்டும். [சித்திரை போகிறாள்.]

கண்ணே! ராகுலா! இப்படிவா. உன் தந்தை சீக்கிரம் வருவார்! உன்னைக் கட்டியணைத்து முத்தமிடுவார்!

[கட்டியணைத்து முத்தமிடுகிறாள்.]

சித்திரை, திரிபுஷன் பல்லுகன் இவர்களை அழைத்துக் கொண்டு வருகிறாள்.

அவர்கள் யசோதரைக்கு நமஸ்காரம் செய்கிறார்கள்.

ய. வாருங்கள் வணிகர்களே, நீங்கள் எனது பிராணநா தரைக் கண்டது உண்மைதானே? எப்பொழுது கண் டீர்? எவ்விடத்தில் கண்டீர்? எப்படி இருக்கிறார் அவர்? எல்லாம் சவிஸ்தாரமாய்ச் சொல்லுங்கள்,

தி. அம்மணி, அவரை ராஜக்கிரஹ நகரத்திற் கண்டோம். இரண்டு தினங்களுக்கு முன்பாக அவர் பாதத்திற் பணிந்து அவரது தர்ம சக்கர நீதிகளைக் காதாரக் கேட்டோம். அவர் இல்லறத்தைத் துறந்து துறவியானு ரென்று தாம் துயரப்படலாகாது, அரசர்களெல்லாம் தன் பதம்பணியும் படியான புத்தரென்றும் சாக்கியமுனி யென்றும், பெரும் புகழுடன் விளங்குகிறார்.

ய. உடம்பிற்கு ஒன்றுமில்லாது சவுக்கியமாயிருக்கிறாரா?

ப. அம்மணி, அதைப்பற்றி உங்களுக்குக் கவலையே வேண் டாம். அவரைப் பார்த்தபொழுது, எங்கள் கண்ணுக்கு, பிணி மூப்பு நரை திரை அணுகாத தெய்வீகம் பொருந் திய தேவலோக வாசியைப்போல விளங்கினார். பாதாதி கேசம் வரையில் ஒரு தேஜஸ் விளங்கியது.

ய. மிகவும் சந்தோஷம். அவர் இப்பட்டணத்திற்கு வருவ தாகவா அறிந்தீர்கள் நீங்கள்?

தி. ஆம் அம்மணி, நாங்கள் விசாரித்ததில் இரண்டு தினத்தில் இப்பட்டணம் வந்து சேர்வதாகத் தெரிந்தது.

ய. மிகவும் சந்தோஷம் — சித்திரை, மஹாராஜாவிடம் சொல்லி இவர்களுக்குத் தக்க பரிசளிப்பாய் —

சி. இதோ மஹாராஜாவே வருகிறார் !

சுத்தோதனராஜன் வருகிறார்.

சு. அம்மா ! யசோதரை ! நமது கலி நீங்கும் காலம் வந்து விட்டது. சித்தார்த்தன் நமது பட்டணத்திற்கு இன்னும் இரண்டு தினங்களுக்குள் வருவதாகச் செய்தி வந்தது.

[வணிகர்களைப் பார்த்து]

ஓஹோ ! நீயே இவர்களிடமிருந்து கேட்டுவிட்டாற் போலிருக்கிறது ?

ய. ஆம், மாமா, நான் நேராகக்கேட்டு சந்தோஷிக்கவேண்டுமென்று வரவழைத்தேன். இச் சுப செய்தியைக் கொண்டுவந்த இவர்களுக்குத் தக்கபடி பரிசளிக்கும்படி வேண்டுகிறேன்.

சு. அப்படியே, அதற்குச் சந்தேகமென்ன? அன்றியும் நமது பட்டணத்தையெல்லாம் அலங்கரிக்கும்படி உத்தரவு செய்கிறேன், உனது பிராணநாதனைத் தக்கபடி மரியாதையுடன் வரவழைக்க. மேலும் நமது மந்திரி பிரதானிகளையும் அனுப்பி பரிவாரங்களுடன் எதிர்கொண்டழைக்கும்படி கட்டளையிடுகிறேன். இனி கவலையற்றிரு. இவ் வாடைகளை யெல்லாம் களைந்துவிட்டு, நீயும் அலங்காரம் செய்துகொண்டு சித்தமாயிரு.

ய. உத்தரவுபடி.

[சுத்தோதனன் வணிகர்களையழைத்துக் கொண்டு போகிறார்.]

காட்சி முடிகிறது.



## ஐந்தாம் காட்சி.

இடம்—கபிலவாஸ்துவில் ஓர் வீதி.

ஜனங்கள் வீதியில் தண்ணீர் தெளித்தும்
கோலம் போட்டும் தோரணங்கள் கட்டியும் இவ்வாறு
பலவிதமாக அலங்கரிக்கின்றனர்.

மு-ம. ஏண்டாப்பா ! ரொம்ப அவசரமா அலங்காரம் பண்ணரைங்களே ! இந்த பக்கமாதான் வரப்போராரோ எளவரசரு ?

இ-ம. இந்த பக்கம் வராப்போரு என்ரு ? நம்ப பட்டணத்துக்கு வர்ராரே இண்ணு சந்தோஷத்துக்கோசாரம் அலங்காரம் பண்ணரோம்.

மு-ம எந்த பக்கப் வர்ராராம் ?

மு-ம ராஜா காலமே புடிச்சி தெற்கு கோபுர வீதியிலே காத்கினு இருக்குராராம்; இன்னம் அவர் வரலே இண்ராங்கள்.

இ-ம. வராமெ போவாரா ? எப்படியும் வருவாரு—சீக்கிரம் இந்த தோரணத்தெ கட்டிட்டு நாம்பளும் போய் பாக்கலாம்.

சித்தார்த்தர், சாரீபுத்ரன், மௌத்கல்யாயனன்
இவர்களுடன் பிட்சை வாங்கிக்கொண்டு
வருகிறார்.

சா. பகவன், தங்களை ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன்.

சி. சுகமாய்க் கேள்

சா. தாங்கள் சற்று முன்பாக அஸ்தமகிரியில் ஒரு மாளிகைக்குப் போய் வந்தீரே, என்ன காரணம்பற்றி ?

சி. சாரீபுத்ரா, நான் குடியிருந்த வீட்டைக் கும்பிடப் போனேன்.

சா. பகவன், தாங்கள் கூறுவது எனக்கு அர்த்தமாகவில்லை

சி. என்னைப்பெற்ற தாயாரை தகனஞ் செய்தபின், அச்சாம்பரை அடக்கம் செய்து சமாதி கட்டியிருக்கிறார்கள். அங்குபோய்க் கும்பிட்டு வந்தேன்.

[வீடுகள் தோறும் போய் பிட்சை வாங்கிவருகிறார்; உள்ளே கோஷ்டம் "மஹாராஜா வருகிறார் இவ்வழி ! ஒதுங்குங்கள் ! ஒதுங்குங்கள் !"]

சுத்தோதனன் பந்துக்களுடனும் பரிவாரங்களுடனும் விரைந்து வருகிறார்.

சித்தார்த்தர் அவரைக்கண்டதும் பணிந்து அவர் பாதத்தில் நமஸ்கரிக்கிறார்.

சு. [கண்களில் நீர்ததும்ப அவரை எழுப்பிக் கட்டியணைத்து] சித்தார்த்தா ! சித்தார்த்தா ! இப்படியும் முடியுமா ? இப்படி நேரிடுமென்று நான் கனவிலும் நினைக்கவில்லையே ! தேவேந்திரபோக மநுபவித்த இந் நாட்டு இளவரசனாகிய சித்தார்த்தன், அழுக்கு வஸ்திரம் அணிந்து, கப்பரை யொன்றைக் கையிலேந்தி, கடையர்கள் வாழும் வீதியில் பிட்சை வாங்கிக்கொண்டு, தன் ராஜதானிக்குள் கரந்து நுழையும்படியும் இருந்ததா ! என் மைந்தா ! உனக்கு என்ன குறை வந்ததப்பா ? உலகத்தில் எதை வேண்டினும் க்ஷணத்தில் பெறும்படியான மஹிமை வாய்ந்த இக்ஷ்வாகு குலத்தில் உதித்த நீ, இக்கோலத்துடன் வருவானேன் ? தேவர்கள் புடைசூழ தேவ துந்துபி முழங்க, அமரர்கோன் ஐராவதத்தின் மீது ஆரோகணித்து அமராவதிக்குள் நுழையும் தன்மைபோல், நீ இப்பட்டணத்திற்குள் பிரவேசிக்க வேண்டியவனா யிருக்க, நீ கஷ்டப்பட்டு காலால் நடந்துவரக் காரணமென்னே ?

சி. அண்ணா, தாங்கள் அறியாத விஷயமன்று. நான் மேற்கொண்ட விரதத்திற்கு அவைகளெல்லாம் பொருந்திய

வையல்லவே.

சு. அப்பா! இவ் விரதத்தை யேன் மேற்கொண்டாய்? இத்தனை வருஷகாலமாக வயோதிகனான உன் தந்தையையும், இளமையுடைய உன் மனைவியையும், கைக்குழந்தையாகிய உன் மைந்தனையும், எப்படி விட்டுப் பிரிந்திருக்கத் துணிந்தாய்? என்ன காரணம்பற்றி அரச கோலத்தை அகற்றி அற்ப ஆண்டியின் ஆடையைப் பூண்டாய்?

சி. அண்ணா, எனது முன்னோர்கள் பரம்பரையாக ஆண்ட வழக்கமே இது.

சு. தொன்மையான நமது சூரிய வம்சத்தில் உன்னைப்போல் இவ் வயதில் துறவியானவர்களை நான் கேட்டதில்லையே!

சி. மனுஷ்ய பரம்பரையைப் பற்றி நான் கூறவில்லை. போதிசத்வர்களாயிருந்து புத்தர்களானவர்களுடைய பரம்பரையைப் பற்றியே கூறினேன். அவர்களில் ஒருவனும் நான், அவர்கள் செய்ததைச் செய்கிறேன்; அணிமுடி யணிந்த அரச னொருவன், தன் நகர்வாயில் துவராடை யணிந்த துரவியாகிய தன் மைந்தனை, இப்பொழுது நீர் சந்திக்கிறபடி, முன்பும் சந்தித்திருக்கிறான்; முன்பும், உலகத்திலுள்ள உயிர்களின்மீது கொண்ட தயவினால், உலக வின்பத்தை யெல்லாம் துறந்து, ஞான நிலையை யடைந்து, உலகத்தை யெல்லாம் உஜ்ஜீவிக்கும் பொருட்டு பிறந்துள்ள புத்தன், தன்னைப் பெற்ற தந்தையின் பாதத்தில் தாழ்வுடன் பணிந்து, தான் தேடிக் கண்டு பிடித்த அழிவிலா அளவிலா அரும் நிதியை, அனுபவிக்கும்படி வேண்டியிருக்கிறான்; அங்ஙனமே நானும் செய்கிறேன் இப்பொழுது. தனையன் கண்டெடுத்த நிதியைத் தந்தைக்குக் கொடுப்பது அவன் கடமையாகு மன்றோ?

சு. அப்பா, நீ தேடிக் கண்டுபிடித்த அந்த அரும் நிதி என்ன?

சி. அண்ணு, அதன் பெயர் புத்த தர்ம சக்கரம்!

[அவரது கையைப் பற்றி]

பிறப்பிறப்பென்னும் வட்டத்தை வெல்லவல்ல சக்கரம்! பிணி மூப்பென்பதனைத் துணிக்கவல்ல சக்கரம்! துக்கமெனும் சாகரத்தினின்றும் கறையேற்றும் சக்கரம்! நிர்வாண சுகத்தை யளிக்கவல்ல சக்கரம்!—

சு. அப்பா, சித்தார்த்தா! ஜ்யோதிஷர்களும் அசிதமஹாரிஷியும் கூறிய வார்த்தைகளின் உண்மையை இப்பொழுதுதான் காண்கிறேன், உன்னிடமிருந்து சாவகாசமாய் இதன் உண்மையைக் கேட்டறிய விரும்புகிறேன். ஆதலால் அரண்மனைக்கு வந்து அவ்விடம் எனக்கும் எல்லோர்க்கும் உபதேசித் தருள்வாய்.

[அவரது கப்பரையைத் தன் கையில் வாங்கிக்கொண்டு]

ஆயினும், முதலில், நமது சுற்றத்தார்களெல்லாம் உன்னை வழிபட வந்திருக்கிறார்கள், அவர்கள் வந்தனை வழிபாடுகளைப் பெற்றுக்கொள்.

[சுற்றத்தாரும், மந்திரிகள் முதலானவரும், அவரது பாதத்தில் முறைப்படி வணங்குகின்றனர்; முடிவில் ஸ்திரீகள் வந்து வணங்குகின்றனர்.]

ஒரு ஸ்திரீ. புத்த ரத்னமே, ஒரு விண்ணப்பம். இன்று காலைத் தம்மைக் கண்டு தரிசிப்பதற்காக யசோதரா தேவியையும் அழைத்தோம்—அதற்கு அவர்கள், என்னைக் குணவதி யென்று தாம் எண்ணி யிருப்பின், என்னை நல்வழிப் படுத்துதற்கு அவரே இங்கெழுந் தருள்வார், அப்பொழுது அடியேனும் இவ்விடத்திலேயே அவரைத் தக்கவாறு வழிபடுதற் குரியேன், என்று சொன்னார்கள்.

சி. அப்படியே செய்வேன்.

[புறப்படுகிறார்; எல்லோரும் பின் தொடர்கிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## ஆறாம் காட்சி.

இடம்—யசோதரையின் அந்தப்புரம்.

யசோதரை ஆடையாபரணங்களை யணிந்து ஒருபுறம் ராகுலனுடன் நிற்கிறாள்.
சித்தார்த்தர் இரண்டு பிட்சுக்களுடன் ஒருபுறமாக வருகிறார்.

ய. [அவர் பாதத்தில் வீழ்ந்து பலம்புகிறாள்.] பிராணநாதா! பிராணநாதா!

சி ஓம்! சாந்தி! சாந்தி! சாந்தி!

ய. கண்ணே! ராகுலா, இவர்தான் உன் தந்தை; இவருக்கு நமஸ்காரம் செய்.

ரா. அண்ணா, நமஸ்காரம். [நமஸ்கரிக்கிறான்.]

சி. [அவனை ஆசீர்வதித்து] ராகுலா, சீக்கிரம் நற்கதி யடைவாயாக!

ய. நாதா! நாதா! நன்மையிலும் தீமையிலும் உன்னைக் கைவிடேன் என்று அன்று நல் அக்கினி சாட்சியாகக் கூறிய மொழியினை மறந்தீரே! உன்மீதுள்ள காதல் என்றும் குன்றேன் என்று கூறிய உறுதிமொழியைத் துறந்தீரே! [கண்ணீர் விடுகிறாள்.]

சி. யசோதரை, அங்ஙனமன்று. உன்மீது நான் வைத்த பிரியமே, உலகத்திலுள்ள பிராணிகள் எல்லாவற்றின் மீதும் பிரியம் வைக்கும்படி எனக்குக் கற்பித்தது.

ய. நாதா! உலகத்திலுள்ள உயிர்களின் மீதெல்லாம் கருணையுடையவராயின், பாபி என்மீது மாத்திரம் ஏன் உமக்குக் கருணையென்பதில்லாமற் போயிற்று? இத்தனை வருடகாலமாக உம்மைப் பிரிந்து நான் என்ன வருந்தினேன் என்பதைக் கனவிலும் நினைந்தீரா?—

சுத்தோதனன் வருகிறார்.

சு. அப்பா, சித்தார்த்தா! அதற்கு நானே சாட்சி. உன்னைப் பிரிந்தது முதல் ஒற்றை வஸ்திர முடித்து, ஒரு போதுண்டு, அணி அலங்காரங்களை அனைத்தையும் விட்டு, அல்லும் பகலும் அல்லலிற்பட்டு வந்தனள். நீ வருவதாகக் கேள்விப்பட்ட பிறகே, உன்னைக் காணும் பொருட்டு பழயபடி அலங்கரித்துக்கொண்டிருக்கிறாள். இது சத்யம். இனியாவது அவள் துக்கப்படாவண்ணம் பார்த்துக்கொள்.

ய. நாதா, அதுதான் நான் தங்களை வேண்டிக்கொள்வது.

சி. இவ்வாறான துக்கத்தை யெல்லாம் வேருடன் ஒழிப்பதற்கே உண்மையை நாடிச் சென்றேன் என்பதை நீ அறிந்திருக்கிறா யல்லவா? இச்சோகத்தை யெல்லாம் சம்ஹரிக்கும்படியான, நீ அன்று கனவிற் கண்ட ஜோதி சக்கரத்தைக் கண்டெடுத்துள்ளேன்.—ஆகவே, இனி நீ துயரப்பட வேண்டியதில்லை.

ய. நாதா, அந்த சூட்சுமத்தை அடியாளுக்கு உபதேசித்தருளவேண்டும்.

சி. அப்படியே ஆகட்டும்.

ரா. எனக்குக்கூட?

சி. அங்ஙனமே ஆகுக!—எல்லோரும் தங்கள் பிள்ளைகளுக்கும் கொடுக்கும் பொருள் அழிவுள்ளவை. நான் போதி விருக்ஷத்தினடியில் அடைந்த நிதி அழிவற்றது, கொடுக்கக் கொடுக்கக் குறைபடாதது. அதனை இவனுக்குக் கொடுப்பேன்!—

சு. அப்பா, சித்தார்த்தா, இன்றைத்தினம் நீயும் உன்னுடன் வந்திருக்கும் பிட்சுக்களும் அரண்மனையில் அமுதுண்ண வேண்டுகிறேன்.

சி. உம திச்சைப்படி.

சு. சந்தோஷம்; இதோபோய்த் தக்க ஏற்பாடு செய்கிறேன். [போகிறார்.]

சி. மௌத்கல்யாயனா, என்ன உன் மனதிற் சந்தேகம்? கேள்.

மௌ. பகவன்! உமது மகிமையே மகிமை! என் மனத்திலிருப்பதை நான் வாய் திறந்து கூறுமுன் கண்டுகொள்ளுகிறீரே! கேட்கலாமோ என்னவோ என்று சந்தேகப்பட்டுக்கொண் டிருந்தேன். கேட்கலாமென்று உத்தரவானபின் சங்கையின்றிக் கேட்கிறேன்.

சி. கேள்.

மௌ. முற்றுந் துறந்த முனிவர்களுக்கு, யாரா யிருந்தபோதிலும், ஸ்திரீ ஸ்பர்சமே கூடாதே; அங்ஙனமிருக்க, யசோதரா தேவி தமது சிர்தங்கிய பாதங்களைப் பற்ற, அதை அங்கிகரித்தீரே, அது எங்ஙனம் என்று என் மனத்தில் சங்கையுண்டா யிருக்கிறது.

சி. அப்பா, மௌத்கல்யாயனா, சங்கை பிறந்தால் உடனே அதை நிவர்த்திக்க முயலவேண்டும் மனதில் அதை அடக்கிவைக்கக் கூடாது.—இதற்குக் காரணம் உரைக்கிறேன், கேட்பாயாக. எல்லாப் பிராணிகளின் மீதும் கருணையிருக்க வேண்டுமென்றால், அந்த 'எல்லாம்' என்கிற பதத்தில் இது ஒன்றும் அடங்கியது தானே! அன்றியும் பந்தத்தினின்றும் முக்தர்களானவர்கள், பந்திக்கப்பட் டிருப்பவர்களைப் பார்த்து, பரிஹசிக்கலாகாது. அவர்கள் மீது பரிவுகொண்டு அவர்கள் பந்தத்தையும் விடுவிக்கப் பட்சமுடன் நாடவேண்டும், மேலும் யசோதரையை சாதாரணமான ஸ்திரீ என்று கருதாதே!

இதற்குமுன் போதிசத்வனாய் நான் எடுத்த எண்ணிறந்த ஜென்மங்களி லெல்லாம், என் மனைவியாக விருந்து, நான் இந் நிலையை அடைதற்கு உதவி புரிந்தவள். முன்னொரு ஜன்மத்தில் நான் ராமன் எனும் நாமமுடைய வணிகனா யுதித்தேன். அப்பொழுது யசோதரை லட்சுமி எனும் நாமமுடைய என்மனைவியா யிருந்தாள். பஞ்சகாலத்தில் உலகமெல்லாம் உணவின்றி வருந்த, திரைகடலோடி நான் திரவியம் தேடிச்சென்று, விலையிலா முத்த மொன்றைக் கொண்டுவர, அச்சமயம் பசியினால் இவள் மூர்ச்சையாய்க் கிடக்க, இவளுயிரைக் காக்க ஒரு படி அமுதுக்காக அம்முத்தை விற்று, இவளுயிரைக் காத்தேன். இந்த ஜன்மத்தில் நான் பெற்ற முக்தம், அதனைப் பார்க்கிலும் எண்ணரிய மடங்கு விலையுள்ளதன்றோ? ஆகவே அதனை இவளுக்குக் கொடுத்து அஞ்ஞானமெனும் இவளது மூர்ச்சையை இந்த ஜன்மத்தில் தீர்ப்பது என் கடனா மன்றோ? ஆகவே இவள் என் காலைப் பற்றினள்; அதனை நான் அங்கீகரித்து, இவள் கடைத்தேறும் மார்க்கத்தை இவளுக்குபதேசிக்க வேண்டியது, என் கடமையாகும்.

ய. ஜகத்குருவே! அடியாள் கண்கள் விளங்குகின்றன இப்பொழுது! அடியாளை அங்கீகரித்து, உபதேசித்து, தம்முடைய பாத சங்கத்திற் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

சி. அங்ஙனமே ஆகுக!

[சின் முத்திரையை வஹிக்கிறார்; யசோதரை பணிந்து நிற்கிறாள்.]

**காட்சி முடிகிறது.**



## ஏழாம் காட்சி.

இடம்—குசீ நகரத்தில் ஹிரண்யவதி ஆற்றின் கரையைச் சார்ந்த ஓர் சோலை.

சித்தார்த்தர், ஆநந்தன், அநுருத்தன் முதலிய சிஷ்யர்கள் புடைசூழ மெல்ல வருகின்றனர்.

சி. [மேல் நோக்கி] காலம் நெருங்கிவிட்டது!

ஆ. பகவன், எதற்கு? அதை அடியேங்களுக்கு அருள வேண்டும்.

சி. என்னுடைய வாழ்நாள் இன்றுடன் தீர்ந்துவிட்டது, என்னுடல் வருதல் போதல் இரண்டிற்கும் காரணமா யிருத்தலை யொழிந்து, நொறுங்கியதேர் போன்றுளது. இனி பரிபூரண நிவ்ருத்தியைப் பெற்று, குடம்பைதனித் தொழியபுட் பறந்துபோவதேபோல், நான் இவ்வுடலை விட்டுப் பிரிந்து செல்வேன்.

[பூகம்பம் உண்டாகிறது.]

ஆ. பகவன்! பகவன்! இப் பூகம்பத்திற்குக் காரணம் யாது?

சி. நான் இவ் வுலகை நீங்கக் கருதி யிருப்பதே.

ஆ. பகவன்! பகவன்! இதற்குள்ளாக அக்காலம் வந்துவிட வேண்டுமோ, இன்னும் கொஞ்சகாலம் பொறுத்து இது நேரலாகாதா? [வருந்துகிறான்.]

சி. ஆநந்தா, உண்மையை அறிந்த நீயே என்ன உளம் கலங்குகிறாய்? எதற்காக வருந்துகிறாய்? இந்த உடலுக்காகவா? இந்த மெய்யும் பொய்யே என்று உணர்ந்திருக்கிறாயன்றோ? நான் வந்த காரணம் பரிபூரணமாகிவிட்டது, ஆகவே சந்தோஷமல்லவோ படவேண்டும்?—அப்பா, இந்த இரட்டைச் சாலமரத்தின் நடுவிடத்தைப் பெருக்கி, நீர் தெளித்துப் பாயையும் விரிப்பாயாக; நான் இன்று நடுஜாமத்தில் நிர்வாணமடைவேன்.

[சிஷ்யர்கள் அங்ஙனமே செய்ய, சித்தார்த்தர் சயனிக்கிறார்.]

அப்பா, ஆநந்தா, எனது நிர்வாணகாலத்திற்குப் பின் இவ் வுடம்பை இன்னவாறு அடக்கஞ் செய்யவேண்டு மென்று உனக்கு முன்பு கூறியிருக்கிறே னல்லவா?— அதன்படியே செய்.

ஆ. பகவன், அப்படியே அப்படியே!—ஆயினும் என் மன வருத்தத்தை அடக்க முடியவில்லையே!

[கண்ணீர் விடுகிறான்; மற்ற சிஷ்யர்களும் துக்கிக்கின்றனர்.]

சி. சிஷ்யர்களே, துயர்படன்மின். யாதனின் யாதனி னீங்கி யானோத, லதனி னதனி னிலன். நிலையிலா இவ்வுலக வாழ்வைக் கருதன்மின், நிரந்தரமான பேரின்பத்தை நாடுமின். "பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம், பிற வாருறுவது பெரும்பே ரின்பம், பற்றின் வருவது முன்னது, பின்னது அற்றோருறுவது." இதை மறவாது நினைமின்.

சிஷ்யர். பகவன்! இப்படி ஞானோபதேசம் செய்து இனி எங்களை யார் தேற்றப்போகிறார்கள்? [புலம்புகிறார்கள்.]

சி. நான் அறிந்தவற்றை யெல்லாம் அறிந்தவன் ஆநந்தன், ஆகவே என்னால் அறியவேண்டியவற்றை இனி அவனால் அறிந்து கொண்மின்.

ஒரு சிஷ்யன். ஹாம்! அந்த குண்டன் அளித்த உணவே நமது பகவானுக்கு இப்படி அசௌக்கியத்தை மிகவும் உண்டு பண்ணிற்று, நமது பகவான் இவ்வளவு சீக்கிரம் இத் திசையை அடையச் செய்தது—என்ன பாபி அவன்!

சி. அப்பா, அப்படிக் கூறாதே!—ஆநந்தா, குண்டன் என் மரணத்திற்குக் காரணமா யிருந்தான் என்று பலர் அவனைப் பழிப்பினும் பழிப்பார்கள்; அன்றியும் அவனும் அவ்வாறே எண்ணி வருந்துதல் கூடும். இப்படி நேரிடா வண்ணம் பார்த்துக்கொள். அவன் அளித்த உணவை யுண்டபின்தான் நான் நிர்வாணத்திற்கு உரியவனானேன். இதனால் அவன் சிறந்த பலனை அடைவது திண்ணம்

அக் காலத்தில் அரச மரத்தடியில் நான் ஞான மடையு முன் சுஜாதை யளித்த உணவும், இக் காலத்தில் நான் நிர்வாண மடையுமுன் குண்ட னளித்த உணவும், எல்லாவற்றிற்கும் மேலானவை. இதை அவனுக்கும் எல்லவர்க்கும் தெரிவி. [கண்ணை மூடிக்கொள்ளுகிருர்.]

சிஷ்யர். அந்தோ ! அந்தோ ! இப் பேருலகம் இருண்டதே ! இருண்டதே !

[துக்கிக்கின்றனர்.]

சி. [கண் விழித்து] நீவிர் துக்கமடையன்மின், இது சந்தோஷத்திற்குரிய காலம். அடைய வேண்டுமென்று அநேக காலமாக முயன்றுவந்த பெரும்பேற்றை இப்பொழுது அடையப் போகிறேன். அதி துக்ககரமான இவ் வைம்புலச் சிறையினின்றும் நீங்கி என்றும் அழிவிலா ஆநந்த மயமான நிர்வாணத்தை அடையப் போகிறேன்.

[ஒரு சிஷ்யன் வந்து ஆநந்தனிடம் ஏதோ ரஹஸ்யமாய்க் கூறுகிருன்.]

ஆ. [சிஷ்யனிடம்] இப்பொழுது சந்தர்ப்பமில்லை என்று சொல்.

சி. [கண் விழித்து] அப்பா, ஆநந்தா, என்னைப் பார்ப்பதற்காக வந்தவரைத் தடுக்காதே—வரட்டும் அவர்.

ஆ. பகவன், அவர் உம்மிடம் வாதாட வந்திருக்கிருர் போலும், அதற்கிது சமயமல்லவே என்று எண்ணினேன்.

சி. அப்படி யிராது—இருந்தாலும் பெரிதன்று—அவரை இங்கு வரவழை.

ஆநந்தன் எழுந்துபோய் சுபத்திரர் எனும் பிராம்மண சன்யாசியை அழைத்து வருகிருன்.

வாருங்கள், உட்காருங்கள்.

சுப. சித்தார்த்தரே, க்ஷேமந்தானு ?

சி. இருக்கவேண்டிய க்ஷேமத்தில் இருக்கிறது.

சுப. உடம்பு என்னமா யிருக்கிறது?

சி. போகவேண்டிய ஸ்திதியி லிருக்கிறது.

சுப. உமது மனதில் ஏதேனும் கிலேசம் இருக்கிறதோ?

சி. எதற்காக இருக்கவேண்டும்? உலகத்தின் உண்மையை அறிந்தபின் இக்காலம் எக்காலம் வாய்க்குமென்று எதிர்பார்த்திருந்த நான், துயர் எதற்காகப் படவேண்டும்? சுபத்திரரே, அருகில் வாரும், உரத்துப் பேச சக்தி யில்லை—

[சுபத்திரர் அருகிற் செல்ல, அவருக்கு சித்தார்த்தர் ஏதோ மெல்ல உபதேசிக்கிறார்.]

சுப. சித்தார்த்தரே, நீரே புத்தர்! நீரே புத்தர்! இதை நான் முன்பே அறியாமற் போனேனே! இவ்வளவு ஞானமும் அழியக் காலம் வந்ததே! இதைக்கண்டு நான் சகியேன்! சகியேன்! நான் வருகிறேன்.

[வருத்தத்துடன் விரைந்து போகிறார்.]

சி. நண்பர்களே, அருகில் வாருங்கள்—ததாகதன் இதுவரையில் உங்களுக்குக் கூறியவற்றுள் ஏதேனும் ஐயமுண்டோ? இருக்குமாயின் சொல்லுமின்—

[அனைவரும் மௌனமா யிருக்கின்றனர்.]

நண்பர்களே, என்னையும் நான் சொல்லியவற்றையும் நேசிப்பதுபோல, நீங்கள் ஒருவரை யொருவர் நேசித்து ஒழுகல் வேண்டும். அன்றியும், என்றும் அல்லவை கடிந்து நல்லவை புரிமின்—இனி துக்கப்படாதீர்கள், இது மகிழ்ச்சிக்குரிய காலம்.

அனு. ததாகதர் ஏன் இவ்வளவு சீக்கிரத்தில் நிர்வாண மடையவேண்டும்?

சி. அப்பா, ஒவ்வொன்றிற்கும் காலவறை யுண்டு, அதைக் கடக்க ஒருவனும் ஏலாது; இவ்வுடலுக்கு இவ்வளவு தான் காலம் ஏற்பட்டுள்ளது—அன்பர்களே, பிறப்பிற்குக் காரணம் எதுவோ அதுதான் இறப்பிற்குக் காரணம், இவ்வுண்மையை என்றும் மறவாதீர்கள், உங்களுடைய மனத்தில் உறுதியாய்த் தரித்துக் கொள்ளுங்கள். இனி இவ்வாயினின்றும் வார்த்தைகள் வெளிப்படா—

[நிர்வாண மடைகின்றனர்; சிஷ்யர்கள் கைகூப்பி வணங்கிய வண்ணம் துக்கிக்கின்றனர்.]

காட்சி முடிகிறது.

